# அமுதக் கலசம்

ஏ. பி. நாகராஜன்,

கவி. கா. மு. ஷெரீப்



பழனியப்பா பிரதர்ஸ்
திருச்சி - 2 : : சென்னை -5

## உள்ளுறை

# வாழ்த்து!

நான்பாட நீநயந்து கேட்டிடல் வேண்டும்
நாவார உனைத்தினம்நான் போற்றிடல் வேண்டும்
வான்வாழ்த்த வளிவாழ்த்த வையமே வாழ்த்த
மனம்வாழ்த்த மகிழ்வளிக்கும் இன்பவடிவே !

பூப்போலே பொன்போலே புத்தகம் போலே
பொழில்போலே புத்தம்புது இன்னிசை போலே
பாப்போலே பாங்குடையார் நேசத்தைப் போலே
பார்வையிலே துயர்தீர்க்கும் இன்ப வடிவே !

எத்தனை நாள் உனைப்பாட வார்த்தைகள் சேர்த்தேன்
எத்தனை நாள் உனைக்காண நித்திரை நீத்தேன்
எத்தனை நாள் உனைத்தேடி உள்ள மிளைத்தேன்
எத்துணையும் மாற்றமிலா இன்பவடிவே !

வேலைசெய்யும் போதிலேயென் முன்புநீ வந்தாய்
வேலைசெய் தலுத்தயர்ந்தேன் கனவிலே வந்தாய்
மாலையிலே சோலைசென்றேன் அங்குனைக் கண்டேன்
மனம்புகுந்து எனைக்கவர்ந்த இன்ப வடிவே !

மதுக்குடித்தேன் உனைமறக்க மதுக்குள் ஒளிந்தே
மதிமறைத்தே அறிவிலூடி நர்த்தனம் செய்தாய்
ஒதுக்கியுனை விட்டுவிட்டே ஓட முயன்றேன்
உலகமெங்கும் நீயாகிறாய் இன்ப வடிவே !

உன்னைவிட்டே எனைப்பிரிக்க ஒண்ணுவதில்லை
உன்னுருவை என்மனந்தான் மறப்பதே யில்லை
என்றுமுனை யின்றித்துணை யாருமே யில்லை
ஈசனெனும் பேரருளே இன்ப வடிவே

# வணக்கம்

பசுந்தளிரில் புதுமலரில், ஓலைக் கொப்பில்,
பாம்பெடுக்கும் படமதனில், வைர வீச்சில்,
சிசுஉருக்கும் குதலைதனில், செந்தீப் பந்தாம்
செழும்பரிதிச் சுடரொளியில், நிலாவட் டத்தில்,
விசும்பியெழும் கடலலையில், வான வில்லில்,
விண்ணெழுப்பும் மின்னதனில், கவலை தன்னை
உசுப்புகின்ற ஏழையரின் நெடுமூச் சொன்றில்,
உச்சிவெயில் உடம்பேற்றுக் கருத்து விட்ட

உழவர்கண்ட கூழதனில், தமிழப்பாங்கில்
உன்னுகின்ற விழிச்சியராம் மாதரீட்டம்
வழங்குகின்ற அதரத்தின் சுவைப்பு தன்னில்,
வழியுநீர் அருவிதரும் பொலிவில் நல்ல
கழைக்குழலின் கீதவெள்ள ஒலிப்போ ரத்தில்,
கிளிமூக்கில் சொட்டுகின்ற செம்மை தன்னில்,
மழைக்கால தவளைகள்வாய்ப் பேச்சில், வீர
வாள்ஒளிக்கும் பாசறையின் ஆர்ப்பில், வேதக்

கருப்பொருளின் மோனத்தில், அமைதி துஞ்சும்
கட்லினடிப் புறத்தில்வளர் பவழச் சோலை
உறுப்பில்தினம் முத்தடுக்கும் சிப்பிக் கூட்ட
உவகையினில், கடாக்களிற்றின் உறுதி யுள்ள
மருப்பதனில், கலைகள்மிசை ஓவி யத்தில்,
மலைக்குகைவாழ் புலிச்சிரிப்பில், சிலைகள் தம்மில்,
மருவிவரும் எழிலையெலாம் எழுது தற்கே
மனந்துளும்பும் வார்த்தையந்தோ கிடைப்ப தில்லை!

# காட்சி!

இயற்கையெனும் தேவியேநின்
எழில்நடனம் கண்டேன்
எனைமறந்தேன் , ஆடுகின்றேன்
ஆடுகின்ற துலகம் !

உயர்வுகெடத் தேய்ந்துதேய்ந்து
உருவமற்றுப் போவாய்
ஒளிநிலவே பின்பிறையாய்
உலகினிடை வருவாய் !

'முயற்சியினால் ஆகிடாது
ஒன்றுமில்லை உலகில்
முயன்றிடுக மானிடனே !'
என்பதுன்றன் தோற்றம்

உயர்ந்தஉன்றன் வாழ்க்கையிலும்
மாசுஉண்டு நிலவே
உன்னையும்தான் விதிப்பாம்பு
விடுவதில்லை அறிந்தேன் !

இயற்கையெனும் தேவியேநின்
எழில் நடனம் கண்டேன்
எனைமறந்தே ஆடுகின்றேன்
ஆடுகின்ற துலகம் !

# மேகம்

இரும்பெனக் கருமை பூண்டே
இருப்பாய்நீ ஒருபு றத்தே!
மறுபுறம் செம்மை காட்டி
மயக்குவாய் உலகுள் ளோரை !
சிறுவர்கள் வண்ணு றைடை
வெளுத்ததோ காயப் போட்டே
இருக்கின்ருன் என்றே சொல்லிக்
களித்திட வெண்மைத் தோற்றம்

காட்டுவாய் பிறிதோர் பக்கம்
ககனத்தே வாசம் செய்யும்
ஈட்டமாம் மேகப் பிள்ளாய்
ஈதுன்றன் செய்கை, இன்னும்
வாட்டமே கொண்டு றங்கும்
வனப்புள்ள மயில்கள் தோகை
கூட்டமாய் விரித்தே ஆடக்
குன்றுருக் கொள்வாய் வெய்ய.

சூரியன் வெம்மை யாலே
துயருறும் மக்கள் உய்ய
சீரிய கரத்தை நீட்டிச்
சீதளம் ஓங்கச் செய்வாய் !
காரிருள் நடுவில் பூத்துக்
களிப்புறும் மதியம் தன்னை
வாரியே உண்பாய் உன்றன்
வன்பசி தணியு மென்று !

அலைப்புறு காற்றுக் காற்ரு
தலைகுவாய் வான முற்றும் !
நிலைகொள்ளா துலகு மூழ்க
நீள்மாரி பொழிந்து நிற்பாய்!
அலையெழு கடல்வாழ் சிப்பி
ஆவலாய் உன்னை நோக்க
விலைமதிப் படங்கா முத்தம்
வழங்குவாய்! மலைமு கட்டில்

தங்கியே கலைஞு ருள்ளம்
தாங்கொணு இன்ப மீவாய் !
இங்கித மறிந்த மேலோர்
இடத்தையே சார்ந்த கீழோர்
பொங்கெரி கரவு உள்ளம்
• புத்தொளி பெறுதல் போன்று
கங்குலே உன்னைச் சார்ந்த
கடல்நீரு நன்னீ ராகும் !

# மின்னல்

வல்லிருளைத் தாண்டிஎழில் தன்னுடலைக் காட்டிவுடன்
சென்றுமறைந் திட்டமின்னல் தோற்றம்—மண
முல்லைதொடுந் தென்றல்புதுப் பெண்ணுடலைத் தீண்ட
உடை
மெல்லவில கப்பொறுக்கா மாது—உயிர்
கொல்லவெழும் நாணத்தினுல் கைகள்கொண்டு ஆடை
தனைக்
கோதியுடல் மூடியதை யொக்கும்—இந்த
நல்லஅருங் காட்சிதனைக் கண்டவருக் கென்றுமின்பம்
வந்துவந்து உள்ளமதில்எக்கும்!

பொய்கையொன்றில் வாளையொன்று பொங்குமெழில்
தோற்றத்துடன்
துள்ளிவிழும் காட்சியது போலே—பெரும்
மையிருளில் வானமதில் வண்ணமொடு மின்னலொன்று
மின்னிமறைந் திட்டதைநான் கண்டேன்—அந்தச்
செய்யஅருங் காட்சிதனை எண்ணிடிலோ இன்றுமென்றன்
சிந்தைமகிழ் வெய்து நிலை கொண்டேன்—மழை
பெய்யவரு நேரமெலாம் பிரேமையுடன் வான்வெளியைப்
பார்த்தந்த காட்சிக்கேங்கி நின்றேன்!

# மழை

உயிரிழக்கத் துணிந்துவானக் கனிதனிலே
உடல்வளர்க்கும் முதலாளிக் காகச்சிறு
வயிரமாம் தாரகைக் கல்லெடுக்க
வருந்தஉடல் உழைக்குமாப் பாட்டாளியாம்
மயில்மயக்குங் கார்மேகக் கூட்டமேனி
வழிந்தோடும் வியர்வைகளே இப்புவியில்
பயிர்வளர்க்கச் சிறுதுளியாய் மணிச்சரம்போல்
பரந்தெங்கும் பொழியுதுபார் நன்மழைதான்!

உழைப்பாளி ரத்தத்தைப் பணமாய் மாற்றும்
உலகத்து முதலாளி தன்னைப்போல
அலைப்புற்று உடல்முழுதுங் கறுத்துவிட்ட
அலர்மேகக் கூட்டத்தின் உதிரந்தன்னை
நிலக்காலந் தொட்டெவர்க்கும் முதலாளியாய்த்
தான்தோன்றித் தனமாக அமைந்தேயங்கும்
நிலைத்துவிட்ட கடவுளர்தம் பெருமைக்காக
நிறம்மாற்றி உகுப்பதுவாம் நன்மழையே!

வேறு

மேகத் தொழிலாளி மீதினிலே
மின்னலெனுந் துளிர்ச் சாட்டைகொண்டு
நேரக அடித்திட்டான் இயற்கையெனும்
நெஞ்சீர மற்றதோர் முதலாளிதான்
ஏக வசனத்தில் இடிக்குரலில்
எழுந்து சப்தித்து உடல்துடிக்க
சோகமுற் றேமேகப் பாட்டாளிதான்
சொரிந்த கண்ணீராம் நன்மழையே!

# தாரகை

மேற்கடல் குதித்த பரிதியெனும்
விளையாட்டுப் பிள்ளையின் செய்கையினால்
ஆர்த்தே யெழுந்த நீர்த்துளிகள்
அகண்ட வானிடைத் தாரகைகள்

மெல்லிய பஞ்சணை மெத்தையிலே
அள்ளித் தெளித்த முல்லைகளாம்
நல்லிருள் தன்னிலே வானத்திடை
நட்சத் திரங்களின் கூட்டமம்மா!

சோளப் பொரிதனை முறத்திலிட்டுச்
'சொங்கு' நீக்கிடப் பாட்டியன்று
நீள் கரத்தாலே பரப்பிவிட்டாள்
நித்திய வானிடை நட்சத்திரம்!

அங்க முழுவதும் உடுக்களெனும்
அழகிய புண்கள் நிறைந்திருந்தும்
சங்கோச மின்றியே மேனிகாட்டிச்
சகத்தை மயக்கிருள் வானப்பெண்ணாள்!

இந்துதன் வாய்தனில் கள்ளைஊற்றி
எங்கும் தெரித்திட வானத்திடை
சந்தோஷ மாக உமிழ்ந்தேவிடச்
சலிப்பிலா விண்மீனாய் மிளிருதுபார்!

மேகமெனும் பொத்தல் ஆடைதாண்டி
வெளியில் தெரியுநல் மேனிகண்டு
மோகங்கொண் டாரோ கூறியசொல்
விண்ணுடலை வெள்ளிக் கூட்டமென்று

சந்திர னென்றபொன் தாலம்தனில்
சம்பா நற்சாதம் தன்னையிட்டு
பைந்தமிழ்ச் சொற்காரி அன்னைதர
பருவ மறியாச் சிறுமதலை

வன்னச் சிறுகரத் தாலள்ளியே
வான வெளிதனில் வீசியதே
சின்னஞ் சிறுவெள்ளச் சோறுகளாய்ச்
சிதறி உடுக்களாய்க் கிடக்குதுபார்!

# பிறை

மலைபோன்ற உருவமைந்த யானையொன்று
மலையைத்தன் எதிரியென்று கொம்பால்குத்த
நிலைக்கோட் டொன்றொடிந்துவிழ அடிவானத்தில்
கலைபரப்பி இளம்பிறையாய் மிளிருதென்கோ!

பறத்தெருவுக் குழந்தையொன்று மாட்டின்கொம்பை
பரந்தநிலப் பரப்பினிலே தோழனோடு
எறிந்துவிளை யாடையிலே எட்டத்திலே
எறிந்துவிட வான்பிறையாய் இலங்குதென்கோ!

விளைபுலத்தில் கதிர்கொய்யும் விவசாயியின்
வலக்கரத்தில் இலங்குகூன் கத்தியோதான்
கலைபரப்பி வான்நிலத்தே தோன்றிவிட்ட
வளர்பிறையைப் பிறிதென்ன சொல்வதென்கோ!

பெரும்புளிய மரத்தினிலே உயரத்திலே
அருங்கிளையில் விளைந்தபெரும் பழந்தானென்று
இருந்திலங்கும் வாரொருக்க ஆகாயத்தில்
இருந்துநிலாப் பரப்பும்பிறை இருக்குதென்கோ!

பருந்தின்கால் நகமோதான் வரிப்புலியின்
பருப்பதத்தின் நகமோதான் ஆண்சிங்கத்தின்
பெருவாயின் வளைபல்லோ மேல்வானத்தில்
திருவெழுப்பும் பிறையையே றெதுதானென்கோ!

# நிலவே சொல்!

வானமெனும் பெரும்வீட்டில்
 வாழுகின்ற மாமதியே!
தோன்றுவதேன் சோகமுடன்
 சொல்லிடுவாய் நீயுவந்து!

பேணுமுன்றன் பிள்ளைகளோ
 பெருங்கூட்டத் தாரகைகள்?
காணுமவை வளர்ச்சியிலாக்
 கவலையினால் நொந்தனையோ?

பகல்செய்யும் சூரியனுன்
 பர்த்தாவோ? அவன்பிரிவால்
மிகவருத்தங் கொண்டேநீ
 வானமெலாம் அலைகிறாயோ?

வருடமெலாம் உன்னுடல்தான்
 வளர்வதிலும் தேய்வதிலும்
வருத்தமிகக் கொண்டனையோ?
 முகம்வெளுத்துப் போனதுவோ?

# மதியும் மங்கையும்

மயங்கினேன் நிலவே உனை நான்கண்டு
மலர்விழிஉடையாள் வதனமோஎன்று
— மயங்கினேன்....

மயல்செயவருவாள் எனமனம்ஏங்கி
வாடிநானிருக்கும் போதுநீவரவே
—மயங்கினேன்....

நலிவினையகற்றும் நல்லமுதனையாள்
நன்முகம்தன்னில் கறையேதுமுண்டோ?
ஒளிவின்றிஉடலை உலகெலாம்காட்டும்
உன்போன்றுதாழ்ந்தாள் அவளல்ல அறிந்தும்
—மயங்கினேன்....

மேகத்தினுள்ளே மறைந்துநீஅவளை
மிஞ்சிடயெண்ணி விளையாடுகின்றாய்
ஆகுமோசொல்வாய் அம்புலிமாதே
அவள்போலலீலை புரிந்திடஉன்னால்?
—மயங்கினேன்...

# எதனால் ?

வானச்சூரியன் வரவுக்கேதாமரை
மலர்ந்தமுகம் காட்டுதே!—நல்ல
—வானச் சூரியன்..

தேனூறும் செவ்விதழ் திறந்ததுமே சிரித்து
தென்றலில் மென்மணம் சென்றிட விடுத்து
—வானச் சூரியன்..

இதழுக்கு வண்ணந்தான் பூசிய தாரோ?
இதயத்தில் குதூகலம் ஏற்றிய தெதுவோ?
இதமுறும் வாசனை ஈந்தவன் எவனோ?
எழில்தனை வாரியே வழங்கிய தெவரோ ?
—வானச் சூரியன்..

# ஏன்?

தடாகத்தி லாடிய தாமரையே–உன்
தளிர்மேனி வாடிய காரணம்சொல்!

–தடாகத்தில்

கெடாது இருந்திட வேண்டுமென்றே
கிண்ணத்தில் தண்ணீரில் உன்னை வைத்தேன்

–தடாகத்தில்

விடாமல் சூரிய வெப்பமுன்றன்
மேனியில் பட்டிடச் செய்துவைத்தேன்
தொடாமல் எட்டத்தில் வைத்தே உன்றன்
சுந்தர மேனியைப் பார்த்திருந்தேன்–எனினும்

–தடாகத்தில்

# அது ஒரு காட்சி!

செந்தா மரைப்பெண் நாணினள்
சீலமில்லா அந்திப் போதுசெய் லீலைகண்டு

—செந்தாமரை.

மந்தாரை மலர்தான் வரவுபார்த் திருக்க
வந்தமாத் தென்றல் முல்லையை அணைக்க

—செந்தாமரை.

சந்திரன் பின்னே தாரகைப் பெண்கள்
சலிப்பின்றி வான வெளியெலாம் சுற்ற
மந்திரமோ அன்றி மாயமோ இங்கே
மதிஅல்லி மலராள் தேனிதழ் சுவைக்க

—செந்தாமரை.

# குயில்!

பாடுதே குயிலும் பாடுதே-இந்தப்
பார்முழுதும் இன்பம் பெருகப் பாடுதே
தேடித்தனது ஜோடிவரப் பாடுதே–காதல்
சிறப்புதன்னை உலகுக் கெடுத்து ஓதுதே

ஆற்றங்கரை மீதினிலே மரத்திலே–தென்றல்
காற்றுவந்து வீசும் அந்திப் போதிலே
ஊற்றுநீரைப் போலஇன்பம் பெருகிட–குயிலும்
ஒய்யாரமாய் அமர்ந்து கீதம் பாடுதே

அழகைக் கண்ட ஆர்வத்திலே பாடுதே–இயற்கை
அன்னைதரும் உற்சாகத்தில் பாடுதே
உலகம் என்றும் வாழ்கவென்று பாடுதே–காதல்
உறவு கொண்டோர் உயர்கவென்று பாடுதே

கவலையெல்லாம் பறந்துபோகப்-பாடுதே
கற்பனையை மனதிலள்ளித் தூவுதே
அவலநிலை அடைந்துவிட்ட ஏழைமேல்-யாரும்
அன்புகொள்ள மாட்டாரென்று சொல்லுதே

பாடுவது கடமையென்று பாடுதே-தனது
பசியைக்கூட மறந்து சும்மா பாடுதே
ஏட்டினிலே எழுதவொண்ணு நிலையிலே–துயரை
என்மனத்தில் அள்ளி யள்ளிக் கூவுதே

பாடுதே குயிலும் பாடுதே–இந்தப்
பார்முழுதும் இன்பம் பெருகப் பாடுதே
தேடித்தனது ஜோடிவரப் பாடுதே-காதல்
சிறப்புதன்னை உலகுக் கெடுத்து ஓதுதே!

# மலர்

சின்னஞ் சிறுகாற் றெனைச்சீண்ட
சிரித்தேன் மலராய் ஆகிவிட்டேன்
'வன்ன மலரே' எனவண்டு
வாய்விட் டழைக்கப் பெருமகிழ்வில்
கன்னற் சுவைநறுந் தேனளித்தேன்
களித்தே வண்டும் அகன்றதுபின்
நின்றேன் உடலம் இதழிதழாய்
நிலத்தில் விழவே அழகிழந்து

ஒருநா ளின்பம் தனைநினைந்து
உள்ள மேங்கும் என்னிடத்தில்
கருவண் டப்புறம் வந்ததில்லை
கதுப்புக் கன்னப் புதுமலரை
விரும்பித் தினமும் செடிக்காட்டில்
திரியும் மலரும் வரவேற்கும்
மறுநாள் மலராள் மனம்வருந்த
வண்டோ புதுமலர் நாடிநிற்கும்!

நகத்தி லழுக்குப் படாவாழ்க்கை
நடத்தும் தனவான் தனக்காக
முகத்து வியர்வை நிலம்சேர
முனைந்தே உழைக்கும் தொழிலாளர்
அகத்திற் சிறிதும் உணர்வின்றி
அடையும் துன்ப நிலைபோல
நகைத்துப் பேசும் வண்டினத்தை
நம்பி ஆனேனன் வைதவ்யம்!

# காவேரிக்கரை

பொன்னியிரு மருங்கிலேயும் தென்னைக் கூட்டம்
புதுப்பெண்ணின் கொங்கையென இளநீர் தன்னை
சென்னியிலே சுமந்திருக்கும் தெளிபுனலிற்
சேல்வரால் இனமுகளும். அடிப்புறத்து
மண்ணிலே வெண்சங்கம் பொன்னேர்உழும்
மட்டிலா நித்திலங்கள், மூன்றுங்கொம்புச்
செந்நெல்லின் முனைகளென சிரிப்புகுக்கும்.
சேர்ந்தஇரு கரையிடையும் அடர்ந்து உள்ள

'செடிச்சிறூர்' தளிர்க்கரத்தால் அலையெழுப்பித்
திளைத்திடுவார் உவகையுடன் நீந்திநீந்தி!
கொடிப் பெண்ணுள் மரக்கிளையில் காலைமாட்டிக்
குப்புறவே பாய்ந்துதண் ணீரைமொள்வாள்
வெடித்தபொன் கொன்றைப்பூ மிதக்கும்வண்டு
வெகுதூரத் திருந்துஅதைத் துரத்திவரும்
தடித்தமாப் பாம்பினங்கள் மரத்தின்வேரை,
தன்னினந்தான் எனநினைத்து அருகணையும்

கொம்பிலே தொங்குகின்ற தேன்கூட்டினைக்
குரங்கொன்று பிய்த்தெறிய, மீன்குஞ்சுகள்
வம்பிலே உடல்மாய்க்கும், அமுதம்உண்ண
வாய்ப்பிருந்தும் உணர்வில்லாக் காரணத்தால்
அம்புவியில் உடல்வருந்தும் தொழிலாளர்போல்!
அருகிருக்கும் புதர்தனிலே நரியும் நின்று
"தம்பியுங்கள் சண்டையிலே என்பக்கமாய்த்
தாவியொரு பொடியரேனு விழமாட்டீரா?"

என்றெண்ணி மீனிற்காய் ஏங்கிநிற்கும்
இசைபாடிக் குயிலினங்கள் காத்திருக்கும்
குன்றுமணி காய்த்திருக்கும்; வெடிகளச்சிக்
கொடியோடிப் படர்ந்திருக்கும்; கரைதனிலே
கன்றுபசு மடிசுவைக்கும்; மேய்க்கும்பிள்ளை,
கமழ்மதுரத் தனித்தமிழில் கீதம்பாடித்
தென்றலுண்டு புங்கநிழல் சாய்ந்திருப்பர்.
தெவிட்டாத வின்பமிது கவிகளுக்கே!

# வசந்தம் வந்தது

பனிநீ ராடிப் பழஇலை அவிழ்த்துப்
பண்புடன் புதுத்தளிர் புனைந்து
இனியநன் வாச நறுமலர் சூடி
ஏதிலாத் தென்றலில் அசைந்து
புனிதமாத் தாவர வர்க்கம் அனைத்தும்
புதுமணப் பெண்ணென நின்றே
கனிவுடன் வசந்த காலம் அதனைக்
களிப்புடன் அழைப்பதோர் அழகாம்

# அவளும் நானும்

குமுதமலர்க் கண்விழிக்கும்
குளிர் நிலாவிலே
அமுதமொழி பேசிடுவோம்
அவளும் நானுமாய்!

கமுகமரச் சோலையிலே
முல்லைக் காவிலே
காதலின்பம் சேர்த்திடுவோம்
கண்ணிமைப் பிலே!

குமுறுமிடி கொட்டுமழைக்
கோலஞ் செய்யினும்
கூடுமெங்கள் எண்ணம் சற்றும்
குறைந்ததே இல்லை!

திமுதிமுக்க சேனை பல
சேர்ந்துவந் தாலும்
தேனிதழின் சுவைமடுக்கா
திருந்தோ மென்றில்லை!

வறுமைசூழும் வையத்திலே
வாடினே மில்லை!
வகையறியா துலகு வையும்
கோபித்தோ மில்லை!

நறுமணமும் மலருமானோம்
நாங்கள் வாழ்விலே!
நஞ்செனினும் ஒருவருண்ண
நாடினே மில்லை!

சிறுகுடிசை ஒழுகுமது
எனினும்எங்கட்கு
தேக்குமின்பக் கோட்டையதைப்
போன்றுவே றில்லை!

உறுதியான காதலிலே
பிணைந்துவிட் டோமால்!
உலகத்துன்பம் எதுவும்எம்மை
வருத்துவ தில்லை!

# கண்டேன்

வானில்முழு மதியைக் கண்டேன்
வனத்தில்ஒரு பெண்ணைக் கண்டேன்
வானமுழு மதியைப்போலே–அந்த
மங்கைமுகம் இலங்கக் கண்டேன்!

கோவைப்பழம் கொடியில் கண்டேன்
குடிசைமுன்னே அவளைக் கண்டேன்
கோவைப்பழ நிறத்தைப்போலே–அந்தக்
குமரிநறும் உதட்டைக் கண்டேன்!

சோலையிலே தென்னை கண்டேன்
தோட்டத்திலே அவளைக் கண்டேன்
சோலைதென்னம் பாளைபோலே–அந்தச்
சுந்தரியாள் சிரிக்கக் கண்டேன்!

மலைமேலே தேனைக் கண்டேன்
மலையடியில் அவளைக் கண்டேன்
மலைத்தேனின் இனிப்பைபோலே–அந்த
மாதரசி பேசக் கண்டேன்

தாழையிலே மலரைக் கண்டேன்
சடைபோட்ட அவளைக் கண்டேன்
தாழைமலர் பறித்துத் தாரேன்–நல்ல
தையலேநீ வாடி யென்றேன்!

கோடையிடி இடிக்கக் கண்டேன்
கொடியமின்னல் வீசக்கண்டேன்
கோடையிடி மின்னலெல்லாம்–அவளின்
கோபமெனக் கண்டுகொண்டேன்!

# அவள் நினைவு

வானுலகு விட்டுவந்த புதுநிலவோ?—நன்றாய்
மலர்ந்திட்ட மணமுள்ள தாமரையோ?
தேனிலும் சுவையுள்ள மாம்பழமோ?—நல்ல
சித்திரப் பாவையே உன்முகம்தான்!

மல்லிகை முல்லைவெ டித்ததுவோ!—உயர்
வானத்துத் தாரகைக் கூட்டமதோ?
மெல்லிய செம்பட்டு மீதினிலே-கொட்டி
வைத்திட்ட வைரமோ உன்சிரிப்பு?

கழச்சிப் பெருவித்தோ? மாவடுவோ?—ஆழம்
காண முடியாச் சமுத்திரமோ?
அழிஞ்சிப் பழமென்றே சொல்லலாமோ?—என்னை
அன்பொடு நோக்கிடும் உன்விழியை?

குன்றிடைச் சென்றிடும் அருவியாமோ?—கானக்
குயில்தரும் இன்னிசைக் கீதமாமோ?
கன்றிளம் பசுதரும் பாலமுதோ?—உன்றன்
கற்கண்டுக் சொற்கிணை ஏதுஅம்மா?

ஒடிநெளிந்திடும் மெல்லலையோ?—காலை
ஊன்றி நடந்திடாச் சிட்டொக்குமோ?
பாடிநடந்திடும் ஓடைதானோ?—மிஞ்சிப்
பண்ணொலி கொஞ்சநீ நடப்பதுவே!

மின்னலைப் பெண்வடி வாக்கினனோ?—பிர்மா
மேகத்தைக் கூந்தலாய்த் தந்திட்டானோ?
பெண்ணினத் தார்க்கென்றே ஒதுக்கிவைத்த-எழில்
முற்றிலும் கொண்டுன்னை ஆக்கிட்டானோ?

முருக்க மலரென்பார் உன்னிதழை—எள்பூ
மூக்கென்பார் சத்தற்ற வார்த்தைசொல்வார்!
எரிக்கும் தணலாகக் கொன்றிடுமோ?—அவை
எட்ட இருந்தேநி னைக்கையிலே!

# நங்கை

நங்கையேஉன் புன்சிரிப்பு
நட்சத்திரக் கூட்டமடி!
தங்கமெல்லாம் உன்றன்மேனி
தருமழகைக் காட்டுதடி!

ஆற்றுவெள்ளம் போலஆசை
அகத்தில்வந்து மோதுதடி
நேற்றுக்கண்ட கண்களுன்னை
இன்றுகாணத் தேடுதடி!

பூக்களெல்லாம் உன்நினைவை
என்றன்நெஞ்சில் சேர்க்குதடி
பாக்களெல்லாம் உன்னையன்றிப்
பாடவர வில்லையடி!

எண்ணமெல்லாம் நீநிறைந்தாய்
என்றன்கண்ணில் நீஉறைந்தாய்
மண்ணும்விண்ணும் எங்குமுன்றன்
மதிவதனம் தெரியுதடி!

நங்கையேஉன் புன்சிரிப்பு
நட்சத்திரக் கூட்டமடி !
தங்கமெல்லாம் உன்றன்மேனி
தருமழகைக் காட்டுதடி!

# கன்னி

கன்னியேஉன் இன்முகத்தைக்
கனவினிலே கண்டேன்-அந்தக்
கனவுதரும் இன்பத்திலே
களிப்புமிகக் கொண்டேன்!

பொன்மலரைப் போன்றஎழில்
பூவையே செந்தேனே-நாளும்
என்மனத்தைக் கொள்ளைகொண்ட
ஏந்திழையே மானே!

அஞ்சுகமே செந்தமிழே
ஆவியே செம்பாகே-என்றன்
நெஞ்சிலிடம் பெற்றுவிட்ட
நேரிழையே மாதே!

மாமலரே வான்சுடரே
வாசமுள்ள பூவே-நல்ல
மாதர்குல மாமணியே
மாற்றறியாப் பொன்னே!

பூங்குயிலே பெண்ணமுதே
போதைதரும் உருவே-இன்பத்
தீங்கரும்ப செந்திருவே
சிந்தைகவர் வடிவே!

கன்னியேஉன் இன்முகத்தைக்
கனவினிலே கண்டேன்-அந்தக்
கனவுதரும் இன்பத்திலே
களிப்புமிகக் கொண்டேன்!

# மதுரம்

சொல்லே மதுரம் மதுரமடா!—அவள்
தோற்றமே தனிப்பெரும் இன்பமடா
வில்லாம் அவள்இரு புருவமடா!—வான
மதியாம் அவள்திரு வதனமடா!
[சொல்லே....]

கண்ணோ கள்ளில் செய்ததடா!—அவள்
கனியிதழ் அமுதிலே நனைந்ததடா!
பொன்னோ மலரோ மேனியடா!—இந்த
பூமியில் அவட்கிணை இல்லையடா!
[சொல்லே....]

முகிலாம் அவளிருள் கூந்தலடா!—நல்ல
முத்தாம் அவள்பல் வரிசையடா
துகிலிட்டு மறைத்திடும் மேனியெழில்—நெஞ்சைத்
தூண்டிலாய்ப் பற்றி இழுக்குமடா!
[சொல்லே....]

# யார் சொல்லுவார்?

முல்லைப் புதருகே—வானில்
    மொய்த்திடும் தாரகை போன்ற மலரினைக்
கிள்ளி நின்ருள் ஒருபெண்—இன்னும்
    கீத மிசைத்தனள் கானக் குயில்போலே!
[முல்லைப் புதருகே]

வில்லை நிகர்புருவம்!—கண்கள்
    வேலெனக் கூரிய வாளெனக் கொண்டவள்
இல்லை யெனும் இடையாள்!—சுவை
    இன்னமு தூறிடும் பொன்தளிர் மேனியாள்
[முல்லைப் புதருகே]

வானில் ஒளிர்மதியோ!—பொய்கை
    மீது வளர்ந்திட்ட தாமரையோ நல்ல
ஞானச் சுடர்விளக்கோ!—அவள்
    நன்முகத் திற்கிணை இல்லையிவ் வையத்தில்
[முல்லைப் புதருகே]

அரக்கு நிறமலரில்—முத்தை
    அள்ளிப் பதித்திட்ட கொள்ளை வனப்பென
இருக்கும் அவள்சிரிப்பு!—தென்றல்
    என்ன அசைந்தே நடக்கும் ஒய்யாரியாம்!
[முல்லைப் புதருகே]

மின்னல் எனவருவாள்!—புள்ளி
    மானெனத் துள்ளி விரைந்தெங்கோ ஓடுவாள்!
கன்னல் மொழிபுகல்வாள்!—என்னைக்
    கட்டித் தழுவியே விட்டுப்பின் னேகுவாள்
[முல்லைப் புதருகே]

நெஞ்சம் மறக்குதில்லை—அந்த
    நேரிழை தன்னையே காணஎன் உள்ளத்தில்
மிஞ்சிடும் ஆசையினுல்—தினம்
    நெஞ்சம் உருகினேன் சென்றிதையார் சொல்வார்
[முல்லைப் புதருகே]

# காதலிக்கு

ஆணழகா! 'வாழ்க்கையிலே
　　யாரும் நம்மைப் போலசுகம்
காணவில்லை பிரியோமினி
　　உலகில்-இதைப்
பேண வேண்டும் நாமிருவர்
　　மனசில்'-என்று

பேசி இன்பம் தந்த உன்றன்
　　பரிவை எண்ணி வாடும்மனம்
நேசிக்குமோ வேரொ ருத்தி
　　உடலை?-இதை
யோசிக்காமல் எழுதுவதோ
　　மடமை!-கர்ப்பம்

ஆனே னென்ருய் ஆசை கொண்டேன்
　　ஆண்மகவு பிறக்கு மென்று!
தேனே! 'சேய் பிறந்திருக்கு
　　க்ஷேமம்-எந்தன்
கோனே அது உங்கள்உரு
　　எனவும்-இனபப்

போதையிலே தூக்கி என்னைப்
　　போட்ட வோலை எழுதிவிட்ட
பேதையே நீ கொள்வதேன்
　　சந்தேகம்?-என்

மேதை மேலானே! நீ என்
　　மேகம்-'சும்மா
ஆசை பேசி மோசம் செய்யும்
　　ஆண் குலத்தை நம்பே னென்று
மீசையுள்ள ஆணைச் சொன்னுய்
　　போதும்-வாழ்வில்
ஓசையில்லை உன்பிரிவால்
　　நாளும்-மனம்

கூடுதில்லை வேலை செய்யக்
　　கொள்ளை வனப்பால் உயிரைச்
சாடும் மதுத் தேக்கம்
　　உன் அதரம்-அதை
நாடும் மனம் தரிக்குமோ
　　கண நேரம்!

# தேன் மலர்

தேன்மலரே தேன்மலரே ஏன்உனக்குக் கோபம்?
இதனாலே என்ன லாபம்?
பேதமற்ற காதலிலே பிணங்குவதே பாபம்!

போதைதரும் வேல்விழியால் மார்பகத்தைக் கொந்தி
மருந்தாகக் கிட்டே குந்தி
வாரிவாரி யின்பந்தன்னை வழங்குவாயே முந்தி!

வான்பிறையே மான்பிணையே மாமயிலே வாராய்!
மகிழ்வோடு என்னைப் பாராய்
நான்உனக்கு என்னபிழை செய்தேனதைக்
கூறுய்?

காதலெனும் வானத்திலே ஜோடிப்புறுப் போலே
• துயரேது மின்றி மேலே
நாம்பறந்த காலமெல்லாம் பழங்கனவோ மாதே!

தேன்மலரே தேன்மலரே ஏன்உனக்குக் கோபம்?
இதனாலே என்ன லாபம்?
பேதமற்ற காதலிலே பிணங்குவதே பாபம்!

# காதலா இயற்கையா ?

தாழைமலர் பூப்பதேன்?—அதில்
தங்க அரவம் விழைவதேன்?
யாழை மனிதன் மீட்டுவதேன்?—அதை
யானை மகிழ்ந்து கேட்பதுமேன்?

சோலைக் குயில்கள் கூவுவதேன்?—அது
துயராய் மகளிற் காவதுமேன்?
மாலைத் தென்றல் வீசுவதேன்?-அப்போ
மல்லிகை மகிழ்ந்து மலருவதேன்?

சந்திரன் வானில் தோன்றுவதேன்?-கண்டு
சாகரம் அலையால் குமுறுவதேன்?
சந்தன மரம் மணப்பதேன்?-அங்கு
தங்கிய நாகம் மகிழ்வதேன்?

பெண்மை ஆண்மைப் பேதமுமேன்?— கூடிப்
பேசில் இன்பம் சுரப்பதுமேன்?
உண்மையில் இவைகள் காதலாலா?-அன்றி
உலக இயற்கைச் செயல்களாலா?

# பருவம் பார்த்த நிலா

பருவச்சிறை....

பருவ மடைந்த பின்னர் உன்னை
வெளியில் விடாமல்-அன்னை
பாது காத்தே அறையினுள்ளே
அடைத்து வைத்தாளா ?-நீயும்
தெருவைப் பார்த்து ஜன்னல் பக்கம்
நின்றிருந் தாயா ?-அம்மா
சினந்து அறைய நிலவே கன்னம்
கன்றி விட்டதா ?-சொல்
கன்றி விட்டதா ?

மணவறை....

சந்த னத்தைக் கன்னந் தன்னில்
தடவி விட்டானா ?-நீயும்
சங்கோ சத்தால் துடைத்துத் தலையைக்
கவிழ்த்து நின்றாயா ?-அவன்
உந்த னுள்ளம் அறிய வேண்டி
ஒளிந்து கொண்டானா ?-கணவன்
ஒளிந்து நிற்கும் இடத்தை நிலவே
தேடுகின்றாயா ? - சொல்
தேடுகின்றாயா ?

பிரிவு நிலை....

காத லன்தான் பிரிந்து சென்ற
காலம் நீண்டதா ?-அவன்
கைபடாமல் கன்னம் மீது
தேமல் வந்ததா ? - நீயுன்
காத லன்தன் வரவை எண்ணிக்
கண் விழித் தாயா ?-அந்தக்
கண்விழிப்பால் நிலவே முகமும்
வெளிறி விட்டதா ?-சொல்
வெளிறி விட்டதா ?

பள்ளி எழுச்சி...

தூங்கும் போது காத லன்தான்
முத்தமிட் டானு ?- அதைத்
துடைத்தி டாமல் எழுந்து நீயும்
வெளியில் வந்தாயா?-அப்போ
பாங்கியர்கள் பார்த்து உன்னைப்
பரிகசித் தாரா ?-அந்தப்
பரிகா சத்திற் கஞ்சி நிலவே
முகம் மறைத் தாயா ?-சொல்
முகம் மறைத் தாயா ?

தாய்மை....

குழந்தை தன்னை எடுத்து முகத்தில்
அணைத்துக் கொண்டாயா ?-அந்தக்
குழந்தை முகமும் உன்றன் முகமும்
இணைந்து தெரியுதா ?-சிசு
மழலை பேசி உள்ளம் தன்னை
மகிழச் செய்யுதா ?-அந்த
மகிழ்ச்சியாலே இருளைப் போக்கிச்
சிரிக்க லானுயா ?-நிலவே
சிரிக்க லானுயா ?

# வருத்தாதீர்

குயில்

மணமே நிறைந்த மலரே செறிந்த
வனமே பிறந்த குயிலே!
துணையே பிரிந்து துயரே மிகுந்து
தனியே வருந்து மடவார்
கணையே புகுந்த மயிலாய்க் கிடந்து
தரைமீ துருண்டே அழவோ,
துணிவாய் மகிழ்ந்து வருவாய் விரைந்து
யெனநீ வசந்த மழைத்தாய்?

நிலவு

எழிலே மிகுத்த கடலே குளித்து
முகிலே உடுத்த நிலவே!
அழகார் முகத்துக் குழலா ரிடத்து
வெகுநா ளுனக்குப் பகையோ?
உளமே துடிக்க உடலே இளைக்க
மதனேய் பிடித்த மடவார்
இளமை வருத்த அழுதே யரற்ற
அழலாய் எரித்த லழகோ?

தென்றல்

வாசம் மிகுந்த சோலை புகுந்து
வீசும் சுகந்தக் காற்றே!
பாசம் நிறைந்த நேசர் பிரிந்த
வேளை அறிந்து நீயே
தேசை இழந்து மாதர் கிடந்த
கூடம் நுழைந்து ஏனே
தூசு நெகிழ்த்து சோகம் விளைத்து
வீணில் வருத்த லானாய்?

# விரும்பிடேன் தோழி

வேறொருத்தி வீடு சென்று வருவோரை-நான்
விரும்பிடேன் எனச்சொல்லு அடி தோழி
—வேறொருத்தி

வார்குழலில் பூமுடித்து வாசல் பார்த்து
வண்டுவிழி நோகும் என்னை வாடிடவிட்டு
—வேறொருத்தி

நல்லவரென்றாய் அவரை நீதோழி! தினம்
நான்வருந்தச் செய்வதுதான் அவர் வேலை
கல்லாதவர் என்றாலும் நான் மன்னிப்பேன் அவர்
கல்லாத நூல் ஒன்று மில்லை ஆதலினால்
—வேறொருத்தி

சொல்வேனிது புதிதல்ல அனுதினமும்; அவர்
சொல்வார் ஒன்று செய்வார் வேறு, கேள் தோழி!
கொல்லையிலே பூவிருக்க மலர் தேடி வேறு
கொல்லை செல்லல் நியாயமா நீ சொல் தோழி
—வேறொருத்தி

# கூவிடு குயிலே!

சோலைக்குயிலே நீ கூவாய்!
சொல்லியசொற்படி இன்றவர் வந்திட
—சோலை

மாலைத் தென்றலில் மலர்ந்த மலர்களில்
வந்திடும் மணமதை உண்டு களித்துமே
—சோலை

நுண்ணிய இடையுள அன்னமே யென்றெனை
அள்ளி யணைத்துமே அமுதூறும் இதழ்தந்து
வெண்ணிலா வீச்சினில் விண்மீன்கள் பார்த்திட
தண்ணிய கரங்களில் தாங்கிய அவர் வர
—சோலை

# ஊரு சிரிக்குமடா !

**ஆண்:**

வானத்து வில்லடியோ கண்ணேயுன்
வளைந்த புருவம் ரெண்டும்
மானொக்கும் நின்விழிகள்—கண்ணேயென்
மதியை மருட்டுதடி !

**பெண்:**

தேனொக்கும் பேச்சழகா—உன் சொல்லால்
செவிகள் குளிர்ந்ததடா
பேணிடும் அவ்வழகு—போனாலென்
பின்னால் வருவாயோடா ?

**ஆண்:**

வாசப் பொன் மேனியடி—உன்றன்
வனப்புக் கிணையேதடி ?
பூசப்படும் சுவரோ—பின்னாலுண்
தேசு கெடுவதற்கே ?

**பெண்:**

கொவ்வை இதழ் கூம்பும்—குமரியென்
குண்டு முகம் திரையும்
செவ்வரிக் கண் குழியும்—அப்போதென்
செவ்வியைப் போற்றுவாயோ ?

**ஆண்:**

அல்வாவை யுண்ணும்போது—அதனின்
அடுத்த நிலை ஆய்தல்
நல்ல செயலோடி ?—கண்ணே யென்
நல்லுரை கேட்பாயடி !

**பெண்:**

எண்ணித் துணிகருமம்—என்பதை
எண்ணாமல் பேசுகிறாய்
உன்னைநான் நம்பி விட்டால்—பின்னை இவ்
வூரு சிரிக்குமடா !

# விள்ளடி

நேற்றுவரை மொட்டாக
இருந்தகாலை
நினைத்தொட நினையாதார்
இப்பொழுது
போற்றுகின்றார் உன்னெழிலை
வாசம்தன்னை
புதுமலரே உனக்கிதுதான்
வந்ததெப்போ ?

சீற்றங்கொண் டென்தம்பி
எறிந்துவிட்டான்
திதிப்பிலாக் காரணத்தால்
"செங்கா" யென்று
மாற்றமில்லாத் தீஞ்சுவையைத்
தருங்கனியே
பட்டற்ற இனிப்புனக்கு
வந்ததெப்போ ?

## வேறு

உள்ளத் துடிப்புடன்
மருட்சி நாணம்
உன்னுடல் தன்னிலே
நேற்று இல்லை
விள்ளடி பெண்ணே
இன்று அவை உன்
மேனியைத் தொட்ட
விதமேதடி ?

# தென்றல்

தேமலர்கள் மெய்தீண்டி—இங்கு
தென்றலென்றே பேர்படைத்த
ஏமம்நிறை மாருதமே !—என்
நேசர்பால் தூது செல்லுவாயே !

வாச மலர்ச் சோலையிலே—அன்று
வந்திருந்தார் நீஇருந்தாய்!
மாசில் ஒளிச் சந்திரனும்—உயர்
வண்ணமணித் தாரகைகள்

பேதமின்றிப் பார்த்திருக்க—அவர்
பேசும்மொழி கேட்டிருந்தேன்!
"காத"லென்றார் ஊடல் கொண்டேன்—என்
கரங்கள்பற்றிப் பிணைக்கொழித்தார்!

"முல்லை" யென்றார் பல்லழகை—"தமிழ்ச்
சொல்லே" என்றார் என்மொழியை
எல்லையில்லா ஆனந்தத்தில்—நான்
என்னை மறந்தே இருந்தேன்!

அன்றுஏனோ என் அதரம்—உயர்
"அமுத" மென்றார் "கிண்ட" லென்றேன்
சென்றுபல நாளாச்சு—அவர்
சேதியொன்றும் தெரியவில்லை !

உள்ளம்நொந்தேன் அவர்பிரிவால்—வேறு
உய்யும்வகை தோன்றவில்லை !
கள்ளமில்லை என்னிடத்தில்—இதைச்
சென்றுரைப்பாய் தென்றலேநீ !

# கிள்ளை

''காதல், காதல்'' என்று சொன்னாய்—கிள்ளாய்
கண்டு கொள்ளப் போதவில்லை
''காதல் கொண்டே வாடுகின்றாள்—லீலா
கவனிப்பாய் ஓய்யா'' வென்று

கூவி அழைத்துச் சொன்னாலென்ன? உன்
குரலடைத்துப் போனதோடா?
''பாவிஉனை வளர்த்தேன் பரிவாய்—தின்னப்
பழமும் பாலும் தந்துமென்ன,

தூதுசெல்லத் தெரியவில்லை!—என்
தொல்லை அவரும் உணரவில்லை!
வாதுபேசி வம்பளப்பாய்!—வேறு
வகையறியாக் கிள்ளா'' யென்று

கூண்டின் முன்னால் நின்றுகொண்டு—உன்னைக்
குறை சொன்னாளே லீலா அன்று!
''தூண்டிற் புழுப்போல் ஆனே,'' னென்றாள்—இன்னுஞ்
சொல்ல ஏதோ வாயெடுத்தாள்!

தாவிவந்தேன் கண்டுகொண்டே—அவள்
தாண்டி ஓடப் பார்க்கையிலே
மேவிப்பிடித்த என்கரத்தில்—லீலா
மேனிகிடந்து பூரிக்கையில்

''காதல் காதல் காத'' லென்றாய்—வீணில்
கதையளக்கும் கிளிப்பிள்ளாய்!
காதலென்றால் என்ன கண்டாய்—கூண்டில்
கத்திக்கத்திக் குமைகின்றாயே!

# தாய்

கால்களை நீட்ட முடியவில்லை இருள்
கண்ணைத் திறக்கவும் கூடவில்லை
சேல்விழிக் காரியாம் அன்னையவள் கருச்
சின்னமாய் வாழ்ந்திட்ட நாளதிலே!
வானொளி ஒன்றென்முன் வந்தது "நீ
மானிலம் ஏகின்றாய்" என்றது
மேலும் என்கையிலே தங்கத்தால் இரு
மென்சிமிழ் தன்னையும் தந்தது

"மானிலம் ஏகின்றாய் அங்குனை எழில்
மழலைச் சிசுவென்பார் கண்டபேர்
தேனினும் இன்பத்திரு வென்பார் இன்னும்
செப்பிலே வைத்த பொருளினை
ஊனை வளர்க்கும் அமுதத்தை உண்ண
ஓராயிரம் வார்த்தை சொல்வார்
வீணிலே ஏமாந்து போகாதே! தந்த
மேலாம் அமுதை இழக்காதே

போய்வா!" என்றது; அன்னையும் கர்ப்பப்
பெருவலி கொண்டனள். சுடரொளி
வாய்ப்புற வாசலைக் காட்டிற்று; நான்
மறுத்திட்டேன் பூமிக்கு வந்திட!
"ஆய்ந்த அனுபவ மில்லையே கையில்
அமுதுடைச் செப்பினை யீந்திட்டாய்
சேயெனச் செல்லு மிடத்திலே பெற்ற
செப்பினைக் காத்திடல் ஒண்ணுமோ?

பூமிக்கு என்னை அனுப்பாதே! இன்றேல்
பொருளைஎன் கையினில் ஈயாதே
மாமிக்கச் சுடரொளித் தெய்வமே" என்று
மண்டியிட்டேன் சுடர் பேசிற்று:
"பூமிக்குச் செல்வது உன்கடன் தந்த
பொருளினைக் காப்பது என்கடன்
ஏமிக்க பயமடை கின்றனை? செப்பில்
இட்டிட்டேன் முத்திரை கண்டறி!

காலம்வரும் செப்பின் முத்திரை அப்போ
கடிதி லுடைந்திடும் உரியபேர்
மேலா மமுதினைக் கொள்ளுவர் அந்த
வேளைவரை இந்தச் செப்பினை
சூலாயுதம் கொண்டே தாக்கினும் உள்ளே
சொரிந்த பொருளினைப் பெற்றிடார்
சீலமிகு பெண்ணே சென்றுவா'' என்று
செப்பி மறைந்தது பேரொளி!

கைக ளிரண்டையும் மூடினேன் ஒளி
காட்டிய வழிதனில் ஏகினேன்
வைகறைப் போதிலே ஓர் தினம் மாதா
மகிழ்ந்திட மண்ணிடை தோன்றிட்டேன்!
''கைகளை மூடிப் பிறந்ததால் இது
கருத்துடைச் சிசு''வென்றும் பேசினர்!
கைகளோ மூடி யிருந்தன நான்
கண்ணைத் திறந்தங்கே பார்த்திட்டேன்!

''மொச்சை விழிக்குட்டி'' யென்றனர் நான்
மூடிய கைகளைப் பார்த்திட்டேன்!
அச்சகோ பொற்சிமி ழில்லையே வீடு
அதிர அழுதேனே வாய்விட்டு
இச்செய லோர்ந்திடா மானுடர் எனக்
கென்னவோ செய்வதாய் எண்ணினர்!
''பச்சைப் பசுமண் வயிற்றிலே பெரும்
பார வலிதானோ?'' என்றனர்!

பாட்டி யொருத்தியும் வந்தனள் ''சிசு
பசியா லழுகுது முதலிலே
ஓட்டிலே மண்ணைக் கரைத்துமே கொஞ்சம்
ஊற்றுங்க'' ளென்றனள் ஊற்றினர்!
தேட்டமுடன் அன்னை கர்ப்பத்தில் நான்
தின்ற உணவெல்லாம் உண்மையில்
பாட்டி யளித்திட்ட தண்ணியின் சுவை
பக்கத்தில் நிற்காது மெய்யிதே!

மண் தண்ணி வாயிலே பட்டதும் அந்த
மண்ணின் மகிமையோ என்னவோ
முந்தை நினைவுகள் போயது நான்
முற்றும் புதுவுளம் பெற்றிட்டேன்!
சிந்தை தெளிந்த பெரியீரே மண்ணை
சிசுவிற்கு ஊற்றும் பழக்கத்தை
இந்த நாளும் பாட்டி செய்கிருள் அது
எண்ணத்தை மாற்றும் மருந்துவாம்!

சிந்தை களித்துச் சிரித்திட்டேன் பாட்டி
செய்திட்ட, 'சூக்குமம்' கண்டவர்
சிந்தை வியந்தனர் நானுமே மண்
தின்றிட மூண்டெழும் எண்ணத்தால்
உந்தி யெழுந்திட எண்ணினேன் காலை
உதறினேன் ஆனல் முடியல்லே!
இந்தநிலை கண்ட ஆங்குளோர் "சிசு
இருக்கட்டும் தாயினைப் பாரென்"ருர்!

தூக்கமோ கண்களைச் சூழ்ந்தது நல்ல
தூக்கத்தி லாழ்ந்து விழித்திட்டேன்!
பாக்களோ மெல்ல ஒலித்தது என்னைப்
பார்த்துமே அன்னை சிரித்திட்டாள்!
ஆக்கந்தரு மந்தச் சிரிப்பிற்கே நான்
அடிமைப் பட்டேன், காலம் ஓடிற்று!
'சீக்குச்' செவாப் பெது மின்றியே நான்
செழித்தேன் வளர்ச்சி தொடங்கிற்று!

குழவி சிறுமியாய் மாறினேன்; பின்பு
கோலப் பருவமு மெய்தினேன்.
பழய உலகிலே அன்னையின் கருப்
பையிலே வாழ்ந்திட்ட நாளிலே
உலகிடை வந்திடாப் போதிலே ஒளி
உவந்து அளித்திட்ட சிமிழ்களை
கலையாத முத்திரைக் கட்டுடன் இப்போ
கண்ணுலே கண்டு மகிழ்ந்திட்டேன்!

வண்ணச் சிமிழ்களென் மார்பிலே நின்று
மன்பதை யோரினைக் கூவின!
'என்ன எடுப்படா குட்டியின் அந்த
எழில்கொங்கை'' என்றனர் வாலிபர்!
என்னையே சுற்றிச் சுழன்றனர் எனக்
கேனென்ப தன்று புரியல்லே!
முன்னே துணிகொண்டு மார்பினை மட்டும்
மூடியே காக்கத் துவங்கினேன்!

இந்த நிலையிலென் மூளையில் ஏதோ
இருந்தென் னிடத்திலே 'இங்கே நீ
வந்திடாக் காலத்தில் யாரோ உன்
வசத்திலே ஒப்பித்த ஒண்பொருள்
உண்டு'யெனச் சதாச் சொல்லிற்று; அதன்
உட்பொருள் யாதென் றறிந்திலேன்!
சிந்தை கலங்கித் திகைத்திட்டேன்! அப்போ
திருமணம் பேசினர் பெற்றோர் தான்!

செங்கதிர் போன்ற முகத்தினன் நல்ல
செவ்வரி பாய்ந்திட்ட கண்ணினன்
மங்கையர் கண்டாலே மையலால் அவன்
மாணடி தோய்ந்திடும் தோற்றத்தான்
எங்கரம் பற்றினன். மின்சாரம் என்
என்பினும் சென்றங்கே தாக்கிற்று!
''பங்கயமே பொன்னே மாதுளை செம்
பழத்தில் விளைந்திட்ட முத்தே நீ!

என்ன அழகடி உன்னை நான் இன்னும்
என்ன சொன்னால் தகுப? என்றுமே
பண்ணினன் ஆயிரம் தோத்திரம் அந்தப்
பாகுமொழி யென்னைக் கவ்விற்று!
பொன்னும் உபதேசம் செய்துமே என்னை
பூமிக் கனுப்பிய பேரொளி
சொன்ன தெல்லாம்காற்றி லெங்கேயோ நான்
தூற்றியென் காதலன் தன்வசம்

என்னை விடுத்திட்டேன். அன்னவன் என்
இதயத்தே மேவிய 'செப்பு'கள்
தன்னைத் தன்வச மாக்கினுன் நான்
தவத்தா லடைந்திடும் இன்பங்கள்
இன்னதென அந்தப் போதிலே கண்டு
இன்பமடைந் துள்ளம் பூரித்தேன்
என்னை மயக்கிடும் வார்த்தைகள் நான்
என்னை மறந்ததும் கோடியே!

இத்தனைக்கும் பின்னும் 'செப்பி'லே இட்ட
இலாஞ்சனை சற்றுங் கலையலே!
நத்தின என்றன் நற் காதலன் அந்த
நல்ல இலாஞ்சனை முகப்பிலே
எத்தனையோ முறை வாய் வைத்தே சுவை
யின்னமு துண்ண முனைந்தனன்!
அத்தனையும் படுதோல்வியே சும்மா
அவலெண்ணி வாய்மென்ற கதைகளே!

''சித்தங் கலங்குதே செப்பிலே இட்ட
சீலஅமு தென்று பொங்குமோ?
வைத்த இலாஞ்சனை முத்திரை தன்னை
மாற்ற யெவராலே ஆகுமோ?
இத்தரை மீதிலே நான்வந்த அந்த
இலட்சியம் என்று முடியுமோ?
பத்தரை மாற்றுச் சுடரொளி! நீ
பக''ரென நானென்றன் கனவிலே

நித்தநித்தஞ் சொல்லி வந்தேனும், இதை
நேற்றென் கணவரே சொல்லினர்.
''அத்தனையும் வெறும் பொய்'' யென்றே நான்
அடித்தவர் பேச்சை அடக்கினேன்!
'சுத்த மனசுடன் சொல்'லென்றுல் நான்
சொல்லுகிறேன் அவர்சொன்ன துண்மையே!
எத்தனை நாள்தான் மறைப்பது? எனக்
கேதோ பளுவாகத் தோன்றிற்று!

சத்தி யெடுத்தது கண்டபேர் "கருச்
சின்ன மிது"வெனக் கூறினர்!
பத்துநன் மாதங்கள் சென்றன ஒரு
பாலன் பிறந்திட்டான், நானுமே
சக்தி யொடுங்கிக் கிடந்திட்டேன் சிசு
சப்த மிட்டதந்தப் போதிலே!
கத்தி யழுதிட்ட பாலனை நான்
கரத்தா லெடுத் தென்றன் மார்பிலே

கட்டி யணைத்திட்டேன் பாலகன் தன்
கஞ்சமலர்ச் சிறு வாயினல்
முட்டி யிலாஞ்சனை சிதைந்திட சிமிழ்
முனையினைப் பற்றினன், அமுதமோ
மட்டிலாக் காட்டாற்றின் வெள்ளம்போல் பொங்கி
வடிந்தது பாலகன் வாயெல்லாம்!
கட்டி யுரைத்திட வொண்ணுத இன்பம்
கண்டேன்! அமுதவன் உண்டானே!

# என்ன ஆகும்?

புருவமா வில்லை யேந்திப்
　　பெருவிழி அம்பு தூக்கி
சிறுமணிச் சதங்கை கோத்த
　　சிலம்பொலி முரசம் கொட்டி
மருங்கெனும் கொடி நின்றுட
　　வார்குழல் சாட்டை வீசி
தெருவினில் வரும் பெண்ணைச்
　　சீண்டினல் என்ன ஆகும்?

# அல்லே நீ வா !

நாட்டங் கொண்டேன் நாடகம் பார்த்திட
நண்பனின் தொல்லையால் நல்லநா ளொன்றில்
ஆட்டம் பார்க்க அனுமதி பெற்றிட
அவதிப் பட்டேன் அதுவெகு நேரம்
பட்ட தொல்லை தன்னை மறந்து
பதைப்புறு உளத்துடன் போயங் கமர்ந்தேன்
பட்டினுல் திரையொன் றிட்டங் கிருந்தது
பகட்டோ கண்ணொளி மழுங்கிடச் செய்தது!

எத்தனை எண்ணங்கள் எப்படி இருக்கும்?
இன்னும் எத்தனை நேரம் வாட்டுவர்?
முத்தணி விதானம் இருக்குமோ? உள்ளே
முகைவிரி தாமரை மலர்களி லூறும்
சத்துள தேன்வாரி தனைவைத் திருப்பரோ?
சார்ந்தந் நாடகம் தனைநான் பார்ப்பது
சத்திய மாக அதுவே முதன் முறை!
அதிலும் வாலிபன்! ஆகவே உணர்ச்சி

பொங்கிற்று நாடக காட்சியை மாந்திட
பூரிக்குந் தோளொடு திரைதனை அகற்றநான்
அங்கை நீட்டினேன் "உஸ்" ஸெனும் சப்தம்!
அடங்கினேன் பெட்டியுள் பாம்பென! அப்பாடா
தங்க மலர்க்கரம் தானொன்று நீண்டென்
தவிப்பறிந் தேதிரை தன்னை விலக்கிற்று!
'திங்கள் தனைஇரு கூறுகச் செய்து
திரட்டி அமைத்த செவ்விரு தூண்கள்

அங்கதன் மீதொரு அழகிய மண்டபம்
அறிவும் ஜீவனும் ஆர்த்தன கீதம்
சங்கை விடுத்தே ஜகத்தை மறந்துநான்
எழுந்தேன் குதித்தேன் ஏதேதோ செய்தேன்
கங்குல் சூழ்ந்தஅக் கவின்பெரு இரவு
விடியா திருக்க வேண்டுமென் றெண்ணினேன்
மங்கலக் காட்சியை மாந்தினேன் மாந்தினேன்
அப்படி மாந்தினேன் ஆகினு மென்ன?

பொழுதோ புலர்ந்தது திரையும் விழுந்தது
பொல்லாப் பொழுதே! நீஏன் விடிந்தாய்?
பழுத்த மாதுளை முத்தொளிர் செம்மையைப்
பழிக்கும் உதட்டினள் முழுமதி முகத்தாள்
தழுவியென் உடல்மேல் சாய்ந்து கிடக்கத்
தங்கத் தூண்மணி மண்டபம் மீது
இழுத்துக் கட்டி இருக்கும் திரையை
அகற்றிஅந் நாடகம் பார்க்கவா அல்லே!

## தமிழே !

தமிழே உனக்கு இணையாக
    தரணியி லுண்டோ வேறுமொழி
கமழ்தே னினுங்கனிப் பாகினுமே
    காய்ச்சிய பாலினும் சுவைமிகுந்த
—தமிழே...

வயதால் மூத்தும் வளம்படைத்தும்
    வழங்கிடும் இயலிசைக் கூத்தென்றும்
உயர்ந்த இலக்கியச் செழிப்போடு
    உலகோர் போற்றிட வாழுகின்ற
—தமிழே ..

திசைமொழி பலவந்து சாடிடினும்
    சிதையா துயர்ந்து நிற்பதினலே
நசையார் வழிகளில் செல்லாமல்
    நன்மை செய்து நிற்பதிலே
—தமிழே...

மதங்கள் பலதரும் மறையனைத்தும்
    மாத்திரை யளவும் வழுவாமல்
இதமாய் இயம்பும் திறம்படைத்த
    இனிய எளிய சொற்கொண்ட
—தமிழே...

தோன்றிய மொழிகள் பலகோடி
    தொலைந்த தவைகளில் பெரும்பகுதி
தோன்றிய காலந் தெரியாமல்
    தூய்மையில் இளமையாய் வாழுகின்ற
—தமிழே...

உலகில் தோன்றும் புதுமை யெலாம்
    உனக்குப் பழமை யென்கின்ற
நிலைமையில் பலப்பல புலவருன்னை
    நித்தம் வளர்த்துவைத் திருப்பதினல்
—தமிழே...

# எங்கள் தமிழ்

சீனிப் பாகுஞ் செழிய தமிழுஞ்
சேர்த்தே உண்டு பார்த்திட்டேன் நான்
சேர்த்தே உண்டு பார்த்திட்டேன்
சீனிப் பாகு கசந்த தெனது
செழிய தமிழ்தான் இனித்தது
செழிய தமிழ்தான் இனித்தது!

சுகந்த மலரும் தூய தமிழும்
துணையாய் இணைத்து நுகர்ந்திட்டேன் - நான்
துணையாய் இணைத்து நுகர்ந்திட்டேன்
சுகந்த மலரை மிகுத்துத் தமிழ்தான்
சுகத்தை எனக்குத் தந்தது - நற்
சுகத்தை எனக்குத் தந்தது!

தமிழை விடுத்தே இயற்கை அழகை
தனித்துக் கண்ணால் பார்த்திட்டேன் - நான்
தனித்துக் கண்ணால் பார்த்திட்டேன்
தமிழால் கண்ட அழகில் லாதால்
சலித்துக் கண்கள் கிறங்கின - மிகச்
சலித்துக் கண்கள் கிறங்கின!

வேற்று மொழியின் இனிய பாட்டும்
வெற்றுத் தமிழும் கேட்டிட்டேன் - நான்
வெற்றுத் தமிழும் கேட்டிட்டேன்
வேற்று மொழியின் இனிய பாட்டை
வெற்றுத் தமிழ்தான் வென்றது - நமது
வெற்றுத் தமிழ்தான் வென்றது!

தமிழி லறிந்த கருத்தை நானும்
பிறநன் மொழியில் படித்திட்டேன் - வேறு
பிறநன் மொழியில் படித்திட்டேன்
அமிழ்தாய் இனித்த அந்தக் கருத்து
அகத்தில் வெறுப்பைத் தூவிற்று - என்
அகத்தில் வெறுப்பைத் தூவிற்று !

புலன்க ளைந்தும் மகிழ்வு கொள்ளப்
பொலிவ தெங்கள் தமிழன்றோ - தினம்
பொலிவ தெங்கள் தமிழன்றோ ?
நலன்க ளெல்லாம் அளிக்குந் தமிழை
நாளும் வாழ்த்தல் கடனன்றோ - நாம்
நாளும் வாழ்த்தல் கடனன்றோ ?

# தமிழ்

முல்லைக் கொப்பை அசைத்துப்புது
முறுவ லூட்டுந் தென்றலென,
அல்லை நீக்கிக் கலைபரப் பிக்குமுதம்
அலரச் செய்யும் மதியமென,
எல்லை யில்லா ஆனந் தத்தைத் தரும்
யாழும் கலைஞன் விரலுமென,
நல்ல தமிழும் நானு மெனப்புவியோர்
நவில இணைய மாட்டேனோ !

# தமிழைக் காப்போம்

ஜாதியில் வைதீகம் தீதென்பார்—அதைச்
சாடிச் சிலபல சொல்லுவார்—ஆனல்
ஓதும் தமிழிலே வைதீகம்—பேசி
ஒதுக்கிடச் சொல்லுவார் வார்த்தையை—இவர்
தீதுரை கேட்ட இளைஞரில்—சிலர்
சிந்தித்துத் தேரா மனத்துடன்—தமிழ்
மீதிலே மாசு படிந்ததாய்—எண்ணி
மாற்றுவார் சொற்களை விந்தையாய்!

ஜோஸ்யம்பை சோசபு ஆக்குவார்—அதை
சுத்தத் தமிழென்று சொல்லுவார்—பெரும்
நாசமிது போல வேறில்லை—அவர்
நாட்டத்திற் கொன்றிங்கு காட்டுவேன்!—தமிழ்
நீசமொழி யென்று சொல்லியே—அதை
நீக்கி வளர்த்திட எண்ணிய-வட
பாஷை நிலையென்ன ஆச்சுது—மொழி
நேச மிழப்பது தீதுகாண்!

பாருக்குள் லத்தீனும் செத்தது—பிற
பாஷையைத் தீண்ட மறுத்ததால்—இன்று
யாருக்கும் உகந்ததாய் ஆங்கிலம்—புவி
போற்றும் சிறப்பினைப் பெற்றது—மொழிச்
சேர்க்கை தனைஏற்ற தன்மையால்!—இதைச்
சிந்திக்கில் உண்மை புரிந்திடும்—சுத்தம்
பார்க்கில் தமிழ்மொழி தன்னிலே—எஞ்சும்
வார்த்தைகள் எத்தனை சொல்லுவீர்!

ஜோஸப்பை சோசபு ஆக்கிஞல்–அது
சுத்தத் தமிழாக ஆகுமோ?–கெட்ட
காசில் களிம்பிணைப் போக்கிஞல்–உயர்
கனக மெனக்கொள ஒண்ணுமோ?–நல்ல
வாசம் வடமொழி என்பதால்–அதை
மாற்றியே நாற்றமென் ருரைதிஞல்-"ஊரில்
பேசும் மொழியாக ஆகுமோ?–மக்கள்
புரியா துழன்றிட நேருமே?

திக்குத் திசைச் சொற்கள் சேர்ப்பதும்–அதைச்
செந்தமிழ் என்றே உரைப்பதும்–பொது
மக்கள் தனக்குப் புரிவதே–என்றும்
வளமார் மொழியெனக் கொள்வதும்–நல்ல
செக்க ரொளிபோல் தமிழிணை–இந்த
ஜெகத்தில் பரப்பிடும் மார்க்கமாம்–இதைத்.
தக்க முறையெனக் கொண்டுமே-தமிழ்
தன்ணை வளர்த்திட முந்துவோம்!

# தமிழ் விருந்து

[கண்ணிகள்]

தீஞ்சுவைச் செந்தமிழ் மாந்தினேன் நானே
வாழ்க்கை செழித்ததையே—என்றன்
வாழ்க்கை செழித்ததையே !
—தீஞ்சுவைச்

வள்ளுவன் தந்த இன்னமு துண்டேன்
வான்புகழ் வாச்சுதையே—வாழ்வில்
வான்புகழ் வாச்சுதையே !
—தீஞ்சுவைச்

பாரதிகீதம் பாடினேன் நாட்டில்
பசிப்பிணி போச்சுதையே—நாட்டில்
பசிப்பிணி போச்சுதையே !
—தீஞ்சுவைச்

சிலப்பதிகாரம் மேகலை யணிந்த
செல்வியாம் தமிழரன்னை—புவியில்
செல்வியாம் தமிழரன்னை !
—தீஞ்சுவைச்

# குறள் காவியம்

உள்ளம் பறிபோனதே ! என்
உள்ளம் பறிபோனதே !
—உள்ளம்

தெள்ளமுதனைய தேவர்தம் குறளை
உள்ளினேன் மனத்தால் உயர்தமிழ் வளத்தால்
—உள்ளம்

பெண்சுகம் வாசப் புதுமலர் இன்பம்
பிழையிலாக் கானம் தரும்பே ரின்பம்
கண்ணினும் இனிய கல்வியின் பண்பும்
களித்திடத் தரும்குறள் காவியம் கண்டேன்
—உள்ளம்

# கவிதை

நல்லதைச் சொல்லுவது கவிதை
நன்மையைச் செய்வது கவிதை
வெல்லுஞ் சொலுள்ளது கவிதை
வித்தை வளர்ப்பது கவிதை
அல்லல் அகற்றியே மனிதர்
அறிவை நிமிர்ப்பது கவிதை
கல்லார் மனத்தினு மீகை
கனிந்திட வைப்பது கவிதை
பூவினும் மணப்பது கவிதை
பொன்னினு மொளிர்வது கவிதை
சாவினைத் தடுப்பது கவிதை
சாகா திருப்பது கவிதை
பாவலர் நாவைய ரங்காய்ப்
படைத்ததில் ஆடுதல் கண்டு
யாவர்க்கு மின்ப மளிக்கும்
எங்கள் தமிழ்மொழிக் கவிதை !

# திருநாடே !

வான்புகழ் தமிழ்நாடே !—உனையே
வாழ்த்தி வணங்கேனே !

—வான்புகழ்

ஆன்றோர்கள் புகழ்பாட
அறிஞர்கள் உனை நாட
அன்பினை முடியாக
அணிந்திட்ட திருநாடே

—வான்புகழ்

செந்நெல் விளைய
தேன்பாயும் நல்லாறு !
செய்யிடை உழவோர்கள்
தெம்மாங்கு பாடிட
சென்னிதான் வானோங்கித்
திகழ்மாட கூடங்கள்
நின்றுனை வாழ்த்திட
நினைப்பிலே உயிரான

—வான்புகழ்

# தாய்த் தமிழ் நாடு

கண்டேனே தாய்த் தமிழ் நாடு!
கமழ்தேனும் அமுதூறும் பொன்மேடு!
—கண்டேனே

வண்டாடும் மலர்ப் பொழிலோடு
மகிழ்ந்தோடும் உயர்வாம் நதிகள்
கண்டாலே களிப்பெய்தும் நீண்ட
கடல் கரையோடு மலைத்தொடர் சூழ!
—கண்டேனே

உண்டோ சொல் இதற்கிணையாக
ஒரு நாடு புவிமீது ஏது
எந்தாயே செந்தமிழ் மாதா
எழிலோடு நீயென்றும் வாழ்க!
—கண்டேனே

# நம் நாடு

அன்னை வயிற்றின் கருவூலம்
அகல உலகில் வந்தக்கால்
முன்னம் நமது விழிகளினால்
முகையாய் விரிந்த இதழ்களினால்
சின்ன நுதலால் முத்தமிட்டுச்
சேர்த்து அணைத்த மண்ணெதுவோ
சொன்னேன் அதுவே நம்நாடு
தொழுவோம் அதனை வாழ்த்தியுமே!

[வேறு]

பேறுகால உபாதையினால் அயர்வுற்றுத்
தாய்கிடக்கும் போதில் ஆங்கு
நேருற்ற சுற்றத்தார் அவள்நிலைக்கு
மனமிரங்கி நொந்து ஏங்க
ஓர்புறத்தே மகவென்று நாம்கிடக்கும்
போதினிலே உவகை கொண்டு
சீர்பெறவே அணைத்துள்ளம் பூரித்த
மண்ணுளதே நமது நாடு!

முப்புறமும் கடலிருக்க மேவியொரு
புறத்தினிலே மலையிருக்க
ஒப்புயர்வு அற்றசெழுந் தமிழ்மொழியே
தாய்மொழியாக் கொலுவிருக்க
செப்பரிய ஜீவநதி பலஓடச்
சீர்மைகளும் பெற்று ஓங்கிக்
கப்பல்மிசைக் காளையர்கள் பவனிவரக்
கண்டதுவே நமது நாடு!

உவர்க்கடலென் றொதுக்கிடவும் கூடாது
அதனிடத்தே முத்திருக்கும்,
உவர்நிலமென் றொதுக்கிடவோ ஒண்ணாது
அதனிடத்தே பொன்னிருக்கும்,

சுவர்க்குதவா தென்றெறியக் கூடாது
கல்லினிடை மணியிருக்கும்!
எவர் மனத்தும் அன்பிருக்கும்; இந்நிலையைப்
பெற்றதுவே நமது நாடு!

நச்சரவு என்றாலும் நன்மணியைப்
பெற்றுயர்வு கொண்டிருக்கும்!
எச்சமென்று சொன்னாலும் ஈக்கள் தரும்
தேனிடத்தே இனிப்பிருக்கும்!
அச்சமுள்ள சிறுபறவை கோழிக்கும்
வீரவெறி உடனிருக்கும்!
ஒச்சமென்று ஒதுக்கவொண்ணா உயர்வனைத்தும்
பெற்றதுவே நமது நாடு!

பொல்லாப்பாம் பென்றக்கால் பொல்லாப்பும்
இந்நாட்டில் உண்டுயென்ற
பொல்லாப்பு வந்தெய்தும் என்றஞ்சிப்
பொல்லாப்பாம் பென்றிடாது
நல்லபாம் பென்றழைக்கும் நன்மனத்தார் வாழ்ந்திருக்க
நாட்டிற் கெல்லாம்
கொல்லாமை தனைப்புகன்ற கொற்றவரை
யீன்றதுவே நமது நாடு!

பெண்களெல்லாம் புலியதனைத் துரத்துகின்ற
பெரும்வலிவைப் பெற்றிருக்க
உண்கலமும் பொன்கலமாய் உழவர்களும்
பெற்றுயர்வு பூண்டிருக்க
வெண்கலத்தின் மணியோசை யெழுப்புகின்ற
பசுக்கள் தனை மேய்த்திருக்கும்
தண்கமலக் கண்சிறுவர் குழலூதும்
கலைநிறைக்கும் நமது நாடு!

கல்லெல்லாம் சிற்பங்களாய்க் காட்சிதரக்
கோபுரங்கள் காலங்கண்டு
சொல்லவொண்ணா நாட்கள் தரும் கீர்த்திதனைச்
சுமந்திருக்கக் குகைகளெல்லாம்

எல்லையில்லாச் சித்திரங்கள் இருந்தின்பம்
ஊட்டுவிக்க ஈடுயில்லா
நல்லபெருங் கல்வெட்டுக் காவியங்கள்
அரசோச்சும் நமது நாடு!

விஞ்ஞான மென்றசொல் மேவிடாக்
காலத்தும் மிருகப் போன்று
எஞ்ஞான்றும் மக்கள்குலம் எழுச்சியின்றி
வாழ்ந்திருந்த நாட்களிலும்
தஞ்சைமாக் கோபுரமும் தண்கடலில்
கப்பல்களும் தண்டும் ஓச்சி
அஞ்சாது சென்றுலக அரங்கினிலே
புகழ்துவிக்கும் நமது நாடு!

# பாரத தேசீய கீதம்

புகழ்மிக்க புண்ணிய பாரதநாடே!
பூமியில் உனக்கெது ஈடே?
ஜெகம்புகழ் உயரிய மக்களைப் பெற்ருய்
தீங்கிலாக் கீர்த்தியும் உற்ருய்! [புகழ்மிக்க]

வெஞ்சமர் வெறுத்தாய் வீரத்தில் திளைத்தாய்
வெற்றிபல் லாயிரம் கண்டாய்!
தஞ்சமென்ருேர்க்கே இன்னருள் புரிந்தாய்
தருக்கிலா வாழ்வையும் கொண்டாய்! [புகழ்மிக்க]

கேரளம் கன்னடம் தமிழகம் ஆந்த்ரா
ஒரிசா வங்கம் அஸ்ஸாம்
சீர்தவழ் நாகர் நாடுடன் காஷ்மீர்
திகழ்ந்திடும் ஹிந்துஸ் தானம்

பார்புகழ் பஞ்சாப் ராஜஸ்தானம்
பண்புறு குஜராத் மராத்தி
நேர்பட மொழிவழி ராஜ்யங் களாக
நியமித்து ஒற்றுமை கண்டாய்!

அன்பிற் சிறந்த பாரத நாடே
ஆண்டவன் உறைந்திடும் வீடே!
உன்திறம் வாழ்க உன்புகழ் உயர்க
உலகெலாம் உனைவாழ்த் திடுக! [புகழ்மிக்க]

# தமிழ் நாடு

ஆன்றோர்கள் போற்றுகின்ற நல்லநாடு-தமிழ்
அன்னைகொலு வீற்றிருக்கும் எங்கள் நாடு!
சான்றோர்கள் வாழுகின்ற இன்பநாடு-கடல்
தன்னையுங் கடந்துபுகழ் கொண்டநாடு!

ஜீவநதி யோடுகின்ற கன்னிநாடு-கலையைத்
தெய்வமாக எண்ணுகின்ற பொன்னிநாடு!
சாவுதன்னைக் கண்டஞ்சிப் பொய்கள்கூறி-வாழும்
தன்மையை வெறுக்குமக்கள் உள்ளநாடு!

கற்பில்லா மாந்தர்களை அஞ்சும்நாடு!-கருங்
கல்லிலேயும் இசைமுழங்கச் செய்யுநாடு!
சிற்பமுடன் சித்திரத்தால் ஆலயம்கட்டி-அதன்
ஜீவியத்தைக் காவியமாய் ஆக்கும் நாடு!

ஆண்களோடு போட்டியிட்டுப் பெண்கள் தவறு-செய்யும்
ஆபாசத்தை நாகரீக மாக்கிடாது
மாண்புநிறை அன்னையராய்ப் பெண்களிலிருந்து-வீரர்
வாழ்வுதன்னைத் தாலாட்டாய்ப் பாடும்நாடு!

தேசம்பல சென்றுகுடி யேறின போதும்-மிகச்
சீலமுடன் வாழுமக்கள் தாய்நாடு!
பாசமிகக் கொண்டவர்கள் தப்புச் செயினும்-அதைப்
பார்த்திருக்க மனமொவ்வாத் தமிழ்நாடு!

# எங்கள் பாரதம்

இமயப் பனிவரை யோர்பால்
இலங்கிடு முப்புறங் கடல்சூழ்
நமதரும் பாரத நாடு
நானிலம் வாழ்த்திடுங் கோயில்!
[இமயப்]

அழகிய நதிகளி னாலும்
அற்புதக் கானகத் தாலும்
உழவரின் தோள்வலி யாலும்
உன்னத வளந்தரு நாடு!
[இமயப்]

தத்துவ ஞானிக ளாலும்
சமயக் குரவர் களாலும்
உத்தமக் கலைகளி னாலும்
ஓங்கியு யர்ந்தநன் னாடு!
[இமயப்]

கற்புக் கரசியர் பெண்கள்
கடமை நெறியின ராண்கள்
நற்பண் புடையவ ரிளைஞர்
நல்ல தவத்தவர் முதியோர்!
[இமயப்]

எத்தனை யெத்தனை மொழிகள்
எத்தனை யெத்தனை யினங்கள்
எத்தனை யெத்தனை மதங்கள்
எனினுமே யில்லையே பகைகள்!
[இமயப்]

மண்ணைத் தோண்டினால் தங்கம்
மலைகள் மீதெங்கு மருவி
வண்ணப் பெருமுத் தளிக்கும்
வளமார் பாரதக் கடல்கள் !
[இமயப்]

## வாழ்த்துக் கூறுவோம் !

ஏர்பிடிக்கும் கைகளுக்கே
வாழ்த்துக் கூறுவோம் !—வறுமை
ஏகும்வகை செய்பவர்க்கே
வாழ்த்துக் கூறுவோம் !—என்றும்
ஊர்செழிக்கத் தொழில்செய்யும்
உழைப்பாளிகள்—வாழ்வு
உயரும்வகை செய்பவர்க்கே
வாழ்த்துக் கூறுவோம் !

கட்டும்உடை கஞ்சித்தொல்லை
என்றே தினமும்—நாட்டில்
சுற்றியலை வோரின் துயர்
தன்னை அகற்ற—நல்ல
திட்டம்கண்டு செயலாற்றும்
தீரர் தமையே—தினம்
தீந்தமிழால் வாழ்கவென்றே
வாழ்த்துக் கூறுவோம் !

எந்திரங்கள் கைத்தொழில்கள்
எங்கும் செழிக்க—நாட்டில்
ஏழைபணக் காரன்என்ற
பேதம் ஒழிக்க—எண்ணி
மந்திரியாய் வந்தமரும்
மானுடர் கொற்றம்—நாளும்
வாழ்கவாழ்க என்றுசதா
வாழ்த்துக் கூறுவோம் !

கலைவளர மொழிவளர
தொழில்கள் வளர—மக்கள்
கற்பும் பண்பும் கொண்டு என்றும்
வளர்ந்தே உயர—வாழ்வில்
உலையாத தொல்லை ஏற்றே
சேவை செய்திடும்—நல்ல
உத்தமர்கள் வாழ்க வென்றே
வாழ்த்துக் கூறுவோம் !

பெண்ணுயர்வு பேணுவோர்க்கு
வாழ்த்துக் கூறுவோம் !—உண்மை
பேசுகின்ற பேர்களுக்கு
வாழ்த்துக் கூறுவோம் !—நாட்டை
கண்ணிமைபோல் காப்பவர்க்கே
வாழ்த்துக் கூறுவோம் !—கல்வி
கற்றுவாழச் செய்பவர்க்கே
வாழ்த்துக் கூறுவோம் !

கோபுரத்தைக் குறைசொல்லும்
குட்டை மனத்தார்—வெறும்
குப்பை மேட்டைக் கோபுரமாய்ச்
சொல்லும் குணத்தார் !—மிக
ஆபத்தான ஆட்களாகும்
அக்கூட் டத்தார்—நாட்டில்
அற்றொழியச் செய்பவர்க்கே
வாழ்த்துக் கூறுவோம் !

வான்வெளியும் ஆழ்கடலும்
கைவச மாக்கி—மக்கள்
வாழ்வதற்கு ஏற்றவளம்
தன்னைப் பெருக்கி—நாட்டில்
தேனும், பசும்பாலும், நஞ்சை
புஞ்சைக ளெல்லாம்—தேங்கச்
செய்திடும் நல்லாட்சிவர
வாழ்த்துக் கூறுவோம் !

மன்னுதமிழ் ஆட்சிகாணக்
காலம் முழுதும்—உடல்
நொந்தழியப் பாடுபடும்
கூட்டத்தார் என்றும்—இந்த
மண்ணின்மிசை திண்ணியராய்
வாழ்ந்திட என்றே—தினம்
வாயார வாழ்த்துரைத்து
சேவித்து நிற்போம் !

# தொத்தப் பசு !

பழையனூர்ப் பண்ணையில் விவசாயக் கூலியாய்
பக்கிரியெனும் ஏழை வேலை பார்த்தான்!
மழைவெயில் என்றுமே பாரா துழைத்ததால்
முதலாளி அவனிடம் அன்பு வைத்தார் !

இளமை முறுக்கிலே இருந்தநம் பக்கிரி
அழகி ஒருத்திமேல் ஆசை வைத்தான்!
எளிதில் அவர்களின் திருமணம் முடிந்தது
இருவரும் ஜோடியாய் வேலை பார்த்தார் !

அவனுக் கிருபடி அவளுக் கொருபடி
அன்றுடக் கூலி நெல் பண்ணையிலே
கவலைப் படாமலே கிடைத்ததைக் கொண்டுமே
குடும்பம் நடத்தினர் இருவருமே !

ஆண்டுக்கு ஒன்றென அடுக்கடுக் காகவே
ஆண்டவன் பிள்ளையை அளித்து வந்தான் !
மூன்று படிநெல்லில் குடும்பம் நடத்திட
முடியாமல் இருவரும் தொல்லைப் பட்டார் !

பக்கிரிமேல் வைத்த அன்பினால் பழையனூர்
பண்ணை முதலாளி இரக்கப் பட்டு
மிக்கஇளைத்திட்ட தொத்தப் பசுஒன்றை
வழங்கினா ரினமாக ஓர் தினத்தில் !

எழுந்து நடந்திட முடியா நிலையிலே
இருந்த பசுதன்னைப் பக்கி ரியும்
விழுந்து விடாமலே தாங்கிப் பிடித்துத்தன்
வீட்டுக்கு மெள்ளவே ஓட்டி வந்தான்!

தொத்தப் பசுதன்னைக் கண்டதும் கத்தியை
தீட்டினார் சேரியில் உள்ளவர்கள் !
ரெத்தம் பிடித்திடச் சட்டியைத் தூக்கியே
தள்ளாடி வந்தது சின்னப் பிள்ளை !

ஈரல் யெனக்கென ஓடியே வந்தது
இன்னொரு பிள்ளைதான் பக்கிரிமுன்!
நாறல் நிணங்களை தின்னும் கழுகுதான்
நாடியே வந்த திற்றச்சி யுண்ண!

அறுத்திடப் போவதை அறியா நிலையிலே
அசைபோட்டு நின்றது அந்தப் பசு
தெருத்திண்ணை மீதிலே அமர்ந்து அழகியும்
சிந்தனை செய்தா ளப்போ தினிலே!

அறுத்திதை உண்பதால் இன்றைக்கு மக்களின்
அரும்பசி யாற்றலாம், ஆனல் வீட்டினில்
நிறுத்தியே பசுதன்னை வளர்த்திட்டால், கன்றீனும்
"உசுப்பத்தி"க் குடும்பந்தான் உயர் வடையும்.

பால்தயிர் மோரென்று பசித்தழும் போதெல்லாம்
பாலகர்க் கீயலாம் வேண மட்டும்
கால்நடைச் செல்வந்தான் காப்பாற்றும் நம்மையே
காப்போ மிப்பசுதனை யெனநினைத்தே

பக்கிரி தன்னையும் பக்குவமாகவே
பையனை விட்டுமே அழைத்தவளும்
முக்கிய மானதோர் ரகசியம் போலவே
வீட்டிற்குள் கூட்டிப்போய் சேதி சொன்னுள் !

வெளியே வந்ததும் சேரியார் முன்னேதான்
விளம்பினன் பக்கிரி விஷயத்தையும்
களிகொண்ட சேரியார் வதனங்கள் வாடின
கைசேதப் பட்டுமே வீடு சேர்ந்தார் !

அழகியின் குழந்தைகள் அழுதன அவைகளை
அன்புடன் தேற்றி யவளும் சொன்னுள் :
"இலகுதேன் போல்நல்ல சுவையுள்ள பால்தனை
இந்தப்பசு தரும் விரைவினிலே

பால்சோறு ஆக்கியே தருவேன் என்கண்களா
பதருமல் என்னுடன் வாருங்கள் நாம்
சேல்துள்ளும் கழனிக்குச் சென்றுமே மாடுதான்
தின்றிடப் புல்கொய்து வந்திடுவோம்"

என்று புகன்றுமே கூடையுங் கைக்கொண்டு
ஏகினாள் அழகியும் அவளின் பின்னே
சென்ற குழந்தைகள் கேட்டன "அன்னையே
பால்சோறு என்றுயே என்ன" என்று!

"எஜமானர் வீட்டினில் சாப்பிடும் உணவது
இனிப்பாய் இருந்திடும்" என்றாளவள்!
நிசமாகப் புரிந்தது போலே குழந்தைகள்
"நீயதைத் தந்திடு" என்றார் தினம்!

நாளைக்கு நாளைக்கு என்றவள் சொல்லினாள்
நாளும் வளர்ந்தது தொத்தப் பசு
வேளைக்கு வேளை தன் மேனி பெருத்தது
மிக்க விரைவில் 'பலப்' பட்டது!

பசுவுக்கு பாப்பாதான் பிறந்திடப் போவதை
பாலகர் கேட்டதும் துள்ளினார்கள்!
பசுந்தழை புல்லென்று பறித்தந்த மாட்டுக்கே
கொடுத்ததன் கொட்டிலைச் சுற்றி வந்தார்!

உறகத்திலும்பசு கன்றீனும் கனவையே
ஒவ்வொரு குழந்தையும் கண்டு வந்தார்!
இறக்கும்நிலையிலே இருந்த பசுகன்று
ஈன்றிடப் போவதைக் கண்டவர்கள்

பக்கிரி மனைவியைப் பாராட்டிப் பேசினர்
பசுவும் ஒருதினம் அதி காலையில்
மிக்கவழகிய கன்றினை யீன்றது
மகிழ்ச்சியால் குழந்தைகள் துள்ளினார்கள்!

அந்தநல் வேளையில் எங்கிருந்தோ அங்கு
வந்திட்ட பண்ணையார் கண்களிலே
கன்றுடன் பசுவுந்தான் நிற்பது பட்டது
கனைத்துக் குரல்தன்னை மிக உயர்த்தி

பக்கிரி தன்னை அதட்டியே கூப்பிட்டு
பசுமாட்டை ஓட்டிவா வீட்டுக் கென்றார்!
உக்கியுடல்குன்றி ஒன்றுமே தோன்றாமல்
ஊமைபோல் நின்றிட்டான் பக்கிரியும்

என்னடா சொல்கிறேன் பேசாது நிற்கிருய்
ஏகென் றதட்டினுர் மேலும்அவர்
மென்னையை ஆத்திரம் வந்து அடைத்திட
வேதனையோடு தான் பக்கிரியும்

ஆகட்டு மென்றேதன் கொட்டிலே நோக்கியே
ஆவேச நடைபோட்டுச் சென்று அங்கே
சீகட்டு பாலுடன் நின்ற பசுதன்னை
தும்போடு கைப்பற்றி ஓட்டலாஞன்!

பக்கிரி மனைவிதான் கன்றைச் சுமந்திட்டாள்
பாலகர் பார்த்துள்ளம் வெம்பி நின்ருர் !
சக்கரம் சுற்றியே கொட்டிலே விட்டுமே !
செல்ல மறுத்தது அந்தப் பசு

உள்ளக் கொதிப்பெல்லாம் ஒன்ருய்த் திரட்டியே
ஓங்கி யடித்துமே ஓட்டலாஞன் !
கள்ள மில்லாப்பசு கண்ணீரும் மல்கியே
கடுகி நடந்த தப்போ தினிலே!

பால்சோறு கேட்டநற் பாலகர் வீட்டிற்குள்
பதுங்கியே மௌனமாய் வீற்றிருந்தார் !
பால்மாடு பத்தோடு பதினென்ருய்ப் பண்ணையார்
பட்டியை நிரப்பிற்று மகிழ்ந்தாரவர் !

# எந்தக் காலமோ ?

உழைப்பவர்கள் உழைப்பவர்கள் !—எங்கள்
உழைப்பாலே உயர்ந்தது இந்த உலகம் !
—உழைப்பவர்கள்

கலைஞனாய் காவியங்கள் செய்து கொடுப்போம்—நல்ல
கருமானாய் ஆயுதங்கள் செய்து படைப்போம்!
வலைஞனாய் கடல் சென்று மீனும் பிடிப்போம் !—உயர்
மறவனாய் வாளேந்தி போரை யொழிப்போம் !
—உழைப்பவர்கள்

திடல்களும் விளைந்திட ஆறுகள் வெட்டி —நாடு
சேம மடைந்திட பாடுகள் பட்டு
திடமுடன் மலையேறி தேனுமெடுத்து—எங்கள்
தேகமு மிளைத்திட பசி பொறுத்து
—உழைப்பவர்கள்

பூமியைக் குடைந்துமே பொன்னு மெடுப்போம்—நல்ல
புஞ்சை விளைந்திட ஏற்ற மிறைப்போம் !
சோமனும் புடவையும் நெய்து கொடுப்போம் !—வையம்
செழுமை அடைந்திட உயிர் கொடுப்போம் !
—உழைப்பவர்கள்

கடலினைக் கடந்திடக் கப்பலும் கட்டி—நல்ல
கால்வாய் கடந்திட தோணிகள் விட்டு
படகினில் ஏறியே அலைகடந்து—கடல்
பாதாளம் சேர்ந்துமே முத்து மெடுப்போம் !
—உழைப்பவர்கள்

காலம் முழுவதும் உழைத்துழைத்து—பெரும்
கஷ்டத்திடையிலே வாழு மெங்களை
ஞாலம் புகழ்வது எந்த நாளிலோ ?—எங்கள்
நலிவு தொலைவது எந்தக் காலமோ ?

# எதனால் ?

உழைத்தலுத்தோர் அழுவதேன் ?—வீணே
உடல்வளர்ப்போர் மகிழ்வதேன் ?
பிழைக்கவிகள் குவிவதேன் ?—உயிர்
பேசுங்கவி குறைவதேன் ?

வாசமலர் காய்வதேன் ?—வெறும்
வண்ணமலர் சிறப்பதேன் ?
தாசிபெருமை அடைவதேன் ?—கற்புத்
தணலாம் பெண்கள் தாழ்வதேன் ?

பாரில் நல்லோர் நைவதேன் ?—கொடுமை
பண்ணு மிலேச்சர் உய்வதேன் ?
நேர்மை தனைஉலகம் விட்டதாலா ?—அன்றி
நிதானம் தனைமக்கள் இழந்ததாலா ?

# துணிவு கொள்!

வாளினைக் கையில் எடடா!—தோழா!
வையகம் உய்யும் வழிதனைச் செய்வோம்—நீ
—வாளினைக்

நாளெல்லாம் உழைத்து நலிகின்றான் ஏழை
நல்நிலை வாழ்வோர் உணர்வதாய் இல்லை—நீ
—வாளினைக்

ஆள்வோரும் செல்வர்க்கே அடிமைக ளானார்
அறிஞரும் வள்ளலின் அடிபணிகின்றார்!
தோள்வலி கொண்டநற் சுதந்திர வீரா
துணிவுதான் இனிநம்மை வாழ்விக்கும் அறிந்தே-நீ
—வாளினைக்

# ஈனச்செயல்!

கொல்லும் விஷமுள்ள பொல்லாத பாம்பேஉன்
கூட்டத்தி லுண்டுமோ சொல்—சில
நல்லவர் நட்பிடை பொய்யாகக் கோள்மூட்டி
நாசத்தைச் செய்யு முறை ?

கண்டதும் பாய்ந்து கடித்துப் புசித்திடும்
காட்டுப் புலியே சொல்— அட
உன்றன் இனத்திலே உண்டுமோ கோள்மூட்டும்
ஊனர்கள் நண்பர்களாய் ?

நீர்வாழ் முதலையே நீயும் அறிவாயோ
நீண்டதோர் நட்புதனை—ஒரு
வேரற்றுப் போம்படி கோள்மூட்டும் கீழ்த்தர
வேலையைச் செய்திடவே !

மிருக இனத்தில் இல்லாத கோள்மூட்டும்
வேதனைச் செய்கைதனை—மிகப்
பெருமதி கொண்ட மனிதனும் செய்கின்றான்
சீ!சீ! ஈதென்ன செயல் ?

# இன்றையச் சமுதாயம்

**வேதாந்தி:**

மெய்ஞ்ஞானம் அஞ்ஞானம் பேசிடுவான்—உயர்
வேதங்கள் ஆகமம் ஓதிடுவான்—ஆனால்
பஞ்சக் கொடுமையால் மக்கள் துடிக்கையில்
பால்நாழி ஆழாக்காய் காய்ச்சியுண்பான்!

**வியாபாரி:**

கொஞ்சம் குறையாது கடவுளர் நாமத்தை
கூறிடுவான் வாயால் ஓதிடுவான்—ஆனால்
அஞ்சு பணத்திற்கு வாங்கிய பண்டத்தை
ஐம்பது பணத்திற்கு விற்றிடுவான்!

**மதவாதி:**

எல்லா மதங்களும் ஒன்றுஎன்ற சொல்லை
எப்போதும் வாய்ச்சொல்லாய்க் கொண்டிருப்பான்
—ஆனால்
பொல்லா மதப்பற்றால் தம்மதம் போல்வேறு
புவிமீது எங்குமேயில்லையென்பான்!

**முதலாளி:**

கொழுத்த உணவினால் உடல் பருத்திட
கொழுப்பைக் குறைக்க மருந்து உண்பான்—ஆனால்
உழைத்த தொழிலாளி உடல் இளைத்திட்டாலும்
உதவிதான் செய்திட மனமிசையான்!

**பாட்டாளி:**

மனைவிமக்களை யெண்ணியெண்ணி செக்கு
மாடெனவே தினம் உழைப்பான்—ஆனால்
கனவிலுமே சுகம் காணாது நோய் கொண்டு
காப்பாற்ற ஆளின்றிச் செத்திடுவான்!

சந்தர்ப்பவாதி:

எந்தத் தொழிலும் நிரந்தர மில்லையாம்
எல்லோர் சிநேகமும் அப்படியே—ஆனல்
சந்தர்ப்பந் தன்னைப்பயன் படுத்திக்கொண்டு
தன்னுடல் நோகாது வாழ்ந்திடுவான் !

பொதுவாக,

இந்தநிலையிலே மானிடர் வாழ்வதால்
எவ்வித ஏற்றமும் நாட்டிற்கில்லை—ஆனல்
இந்தநிலைமாற வெண்ணி உழைப்போர்க்கு
இதுவரை அன்புநாம் ஈந்ததில்லை !

# யார் நினைக்கின்றார்கள்?

சென்னை நகரிலோர் மூலை-ஊரின்
      சாக்கடை முற்றிலும் ஓடும்அப் பக்கம்!
தென்னை மரத்தோப்பும் உண்டு-தொழில்
      செய்திடும் கூட்டத்தார் வாழும் குடிசை !
எண்ணிக்கை தன்னில் அடங்கா-அவை
      எல்லாமே ஓலையால் வேய்ந்தே இருக்கும்!
சின்னஞ் சிறுதூற்றல் தாங்கா-தந்த
      தெய்விக வீடும் நிலையவர்க் கில்லை !

வெள்ளம்வந் திட்டாலோ மூழ்கும்-அன்றி
      விரிந்த மனமுள்ள நகராண்மை யாளர்
உள்ளம் நினைந்தால் பிரியும்!-இந்த
      ஓலைக் குடிசையில் வாழ்ந்திடும் மக்கள்
தொல்லைகளோ சொல்லி முடியா-வேலை
      தொலைந்தழு வோரின் தொகைபாதி யாகும்
அல்லும் பகலுமே தோப்பில்-சதா
      ஆடுவார் சூதாட்டம் அய்யோ கொடுமை!

ஆட்டத்தில் தோற்றிட்டால் போதும்-வீட்டின்
      அடுப்பும் அடகிற்கு வந்திடும் இந்தப்
பாட்டாளிக் கூட்டத்தார் வீட்டின்-பழம்
      பாயையும் அடகிற்கு வாங்கிடும் கூட்டம்
நோட்டம் பார்த்தங்கு அலையும்-ஏழை
      நொம்பலம் சொல்லில் அடங்குவ தில்லை
கூட்டி உரைத்திட வில்லை-அந்தக்
      குப்பத்தி லும்மலை யாளத்தான் வந்து

"சா"க்கடை வைத்து நடத்திப்-பொருள்
      சம்பாதிக் கின்றானே என்ன கொடுமை !
மாக்களாய் மக்களை எண்ணி-மலை
      யாளத் தானங்கு விற்றிடும் 'சாயா'

சாக்கடை நீரினை ஒக்கும்!-அந்த
　　சாயத்தண் ணீரும் விலைகுறை வில்லை !
பாக்களைப் பாடிட ஆங்கே-ஒரு
　　பழைய கிராமபோன் பெட்டி இருக்கும் !

ஈயினை மிஞ்சிச் சனங்கள்-அங்கே
　　எப்போதும் கூடிக் களித்தே இருப்பார்!.
வாயினில் பீடியை வைத்தே-பலர்
　　வரிசையாய்க் குந்திக் குடித்துக் களிப்பார்!
ஓயா தழுதிடும் பிள்ளை-அதை
　　உணராத தாயிடம் நேற்றைக்குச் சுட்ட
சூயம் வடைவிற்பான் ஒருவன்-அந்தத்
　　தோப்பினை நோக்கியே போலீசு வந்தால்

ஓட்டம் பிடித்திடும் கூட்டம்-இந்த
　　உயர்தர மக்களும் சென்னை நகரில்
பாட்டன் தலைமுறை தொட்டு-வாழும்
　　பழங்குடி மக்கள்தான் பொய்யிதில் இல்லை!
'தேட்டுமிகு சென்னை' யென்று-வள்ளல்
　　செப்பிய சென்னை நகர்தனில் வந்தோர்
நோட்டு நோட்டாய்க் குவிக்கின்றார்-இந்த
　　நொந்தழும் மக்களை யார்நினைக் கின்றார் ?

# யார் வகுப்பது ?

தங்கக் கிண்ணம் தன்னிற் சம்பா
சாதத்தைப் போட்டு
தளர நெய்யை ஊற்றிநிலா
முற்றத்தே நின்று

" எங்கே கொஞ்சம் உண்ணு பாப்பா
இன்பக்கற் கண்டே
இதுமட்டுந்தான் கண்ணல்லியோ
வாங்கிக் கொள்' ளென்று

தங்க நகை தாங்காதுடல்
தளரவை ரத்தின்
தனியொளியால் இருளகல
சரிகைச்சே லையின்

தங்குதரை தடவமயில்
சாயல்நி கர்த்த
கயற்கண் மங்கை அமுதளிப்பாள்
குழந்தைம றுக்கும் !

தூரத்திலே சேரியிலே
ஏழைப் பாட் டாளி
துணைவிபெற்ற சிசுதுடிக்கும்
புழுவாய்க்கூ ழிற்கு

சாரலிலே தாய்துடிப்பாள்
போர்த்தத் துணி யின்றி !
தாவிச்சிசு மாரைக்கவ்வும்
பாலைக்கா ணாது

வீரிட்டழும் விரைக்கும் நிலா
வேடிக்கை பார்க்கும்
விரிந்தமன மற்றமக்கள்
வாழ்வதைக் கண்டு

தீரமிடித் திட்டமென்பார்
இந்த நிலையிலே
செல்வர்கூடி வகுக்குந்திட்டம்
ஏழைக் காகுமா?

# உடனெழுவீர் !

மொழிகண்டு மொழிதனக்கு இனிமை கண்டு
முன்னாளில் விஞ்ஞானம் இல்லாக் காலை
களிகொண்டு அலைதுள்ளும் கடலி னுள்ளே
கவின்முத்தும் பவ்ளமும் இருக்கக் கண்டு
ஒளித்துண்டாம் வயிரத்தின் குவியல் காண
ஒண்கனியின் உட்புறத்தே சென்று சென்று
துளித்துளியாய் தேன்சேர்க்கும் வண்டே போன்று
தொல்புவியில் புகழ்சேர்த்த தொழிலி னத்தார்,
கலையிழந்து நிதியிழந்து வாடுகின்றார்
காலமெலாம் நோய்களுக்கு இரையே யாகி
நிலைகண்டும் நெஞ்சொடியும் இவர்கட் காக
நினைப்பதில்லை கற்றோர்கள் தொண்டு செய்ய
இலையிந்த நாட்டிடத்தே அன்பு மக்காள்
ஈடேறும் வழிகாணும் நல்லுணர்வு
விலைமதிக்க வொண்ணாத நமது நாட்டு
விற்பன்னர் இந்நிலையில் இருப்ப தாலே!
சூழ்ச்சியினால் சொல்லினிப்பால் பொருள் குவிப்போர்
சுரண் டலினால் ஏமாற்றி உடல்வ ளர்ப்போர்
காழ்ச்சிந்தை கயவர்கள் ஏழ்மை தன்னை
கடவுள்செய லெனநம்பும் உன்மத் தர்கள்
பாழ்படுத்தும் பணக்கொழுப்பு முதல்ப டைத்தார்
பள்ளருடன் பறையரென்ற ஜாதி பேதம்
ஊழ்வினையே சாக்காடு என நினைக்கும்
உறுதியிலாக் கொள்கைபல பெருகக் கண்டோம்!
நேர்மைக்குப் புறம்பான இவைகளெல்லாம்
நிர்மூல மாவதற்கு ஒன்று கூடி
சோர்வுற்ற மக்களிடை எழுச்சி யூட்டி
சொல்லிற்கும் செயலிற்கும் தொடர்புண் டாக்கி
ஆர்வத்தால் அன்பதனால் புதிய நாடு
அமைத்தந்த நாட்டினிடை மக்களெல்லாம்
ஓர்நிறையாம் எனச்சொல்லும் வகையுண் டாக்க
உடனெழுவீர்! தொண்டுசெய்வோம்! இளைஞரே நாம்!

# எது இன்பம் ?

மல்லிகை சம்பங்கி முல்லை மலர்களின்
 மாமணம்தான் இன்பமா?-அம்
மல்லிகை பூக்க மகிழ்வாய் உழைத்தோனின்
 மாண்புபேண லின்பமா?

சிற்பத்தின் மேன்மை சிறப்பித்துப் பேசுதல்
 தேசத்தீரே இன்பமா ?- அச்
சிற்பத்தை வட்டிக்கச் சிற்றுளி ஏற்றோனின்
 சீர்மைபேண லின்பமா ?

சொல்லின் இனிப்புத் தொகுப்புக் கவிநயம்
 'ஜோர்' எனல்தான் இன்பமா ?- தன்
சொல்லைக் கவியாக்கித் தொல்லைக ளேற்றோனின்
 துயர் நீக்குத லின்பமா ?

தேசப் பணியாளர் சேவையைத் தூற்றிச்
 சிரிப்பதுதான் இன்பமா ?- அன்றி
மாசற்ற அன்பால் மகிழ்ந்தவர் தொண்டு
 மதிப்பதுதா னின்பமா ?

எது இன்பம்? எது இன்பம்? எது இன்பம் ? எதுஇன்பம்?
 எனக் கேட்டல்தா னின்பமா ?- அன்றி
எது வந்தாலும் சரி என்றேற் றிடஎண்ணி
 இருப்பதுதா னின்பமா ?

வறியார்க் குதவுதல் மானுட வாழ்க்கையில்
 வற்றாத பேரின்பமாம் !-இதை
அறியாது வீணாக ஆயிரம் பேசுவோம்
 ஆயினும் இன்பமில்லை !

# தொழிலாளர் குரல்

வானோங்கி நிற்குது பார்தோழா,
வண்ணமா மாளிகைகள்!
ஏனோநாம் தங்குதற்குத் தோழா
ஏற்ற குடிசையில்லை!

வானூர்தி செய்தோம் அடா தோழா
மற்றவர் ஏறுகின்றார்!
ஏனென்று கேட்போமானால் தோழா
இருட்சிறை வாய்க்குதடா!

கழனி உழுதது நாம் தோழா
கண்ட விளைச்சலெல்லாம்
நிழலிலிருந் தோருண்ண தோழா
நாம்பசி ஏற்றோமடா!

மண்ணிடை பொன்னெடுத்தோம் தோழா
மாணிக்கப் பாறை கண்டோம்!
என்றாலும் நம்வீட்டினிலே தோழா
இல்லையே பித்தளையும்!

வன்மனத் தோர்கள் வாழ தோழா
வாழ்வைப் பணயம் வைத்தோம்!
உண்மை உணர்வாரில்லை தோழா
உழைப்பை மதிப்பாரில்லை!

பாவிகள் வாழுகின்றார் தோழா
பாட்டாளி மாளுகின்றார்!
ஆவி துடிக்குதடா தோழா
ஆத்திரம் பொங்குதடா!

உள்ளத் துணர்வுடனே தோழா
உறக்கம் தனைவிடுத்தே
துள்ளிக் குதித்தெழுவாய் தோழா
தொல்லை தவிர்த்திடுவோம்!

# சாடிடுவோம்!

கரியநிறப் பட்டாடை வான வெளி
 கண்சிமிட்டும் தாரகைகள் சரிகைப் புட்டா!
விரிகதிர்த்தண் மாமதியம் நன்மு கப்பெண்!
 வீசுகின்ற தென்றலேஅப் பெண்ணின் மூச்சு!
அரியகலைத் தீஞ்சுவையே பெண்மை இன்பம்!
 அனைத்துலகும் ஓர் குடும்பம்! ஒன்றே மக்கள்!
பிரிவகல எழுதுமுயர் எழுத்தாளிக்குப்
 பேசுமிவை யெண்ணமல்லாற் பிறிதொன் றில்லை!

நாடுவெட்டும் நலிவெண்ணம் கொண்ட பேர்க்கு
 நாட்டம்நல்ல சூரியனை நறுக்கிப் போட!
ஆடுமயில் அழகென்றால் அறுப்போ மென்பார்
 அதுமக்கள் உணவென்பார்! உண்போ மென்பார்!
வாடுமலர்க் குலம்போல மடியு மக்காள்!
 வாழ்க்கையிலே பேதமேன் ஒழிப்போம் வாரீர்!
'கூடுவதால் இன்பமுண்டு' என்றால் இல்லை
 கூறுபோடு தெரியுமதன் சுகம்தா னென்பார்

வேற்றுமையைச் சாடிடுவோம்! வறுமைப் பேயை
 விரட்டிடுவோம்! பகையொழிப்போம்! வாழ்விலென்றும்
சேற்றுநீர் பருகுமக்கள் ஒருபுறத்தில்
 தெளிபுனலாய்ப் பருகுபவர் மற்றோர் புறத்தில்!
நேற்றுவரை இந்நிலைதா னென்றால் இந்த
 நிலைதகர வழிகாண்போம்! வாரீர்! வாரீர்!
ஆற்றிடுவோம் ஓர்குலமாய் வாழத் தொண்டு!
 அனைத்துலகு முய்யுமிந்த அன்பே இன்பம்!

# கவிஞன் குடும்பம்

'வென்று விட்டேன் தமிழணங்கைக் கவிஞ னென்று
வீறு கொண்டே ! அவள்எனக்கு அடிமை யானாள் !
பொன்றாத புகழ்மணக்க உலக மக்கள்
போற்றுகின்றார் என்னெழுத்தை உயிர்போ லின்று !
குன்றுநிகர் தனம்படைத்த செல்வ ரேனும்
குவலயத்தில் எனக்குநிகர் ஆவதுண்டோ ?
நின்றநிலை தன்னிலேநான் கவிதை பாடி
நிலஞ்செழிக்க அமுதமழை பொழியச் செய்வேன்...

முடிக்கவில்லை என்னெழுத்தை! மனைவி என்றன்
முதுகிற்குப் பின்னிருந்து சிரித்துச் சொன்னாள் :
அடித்தளத்தில் பலமில்லை, அரிசி வாங்கி
அடுப்பேற்ற வகையில்லை ! அழும்பிள் ளைக்கு
பிடியென்று தரஒரு சல்லி யில்லை !
பீற்றல் இடைத் துணி ! இந்த நிலையி ருந்தும்
குடிவெறியில் துள்ளுகின்ற மனிதன் போல
கோத்து விட்டீர் வார்த்தைதன்னை அர்த்த முண்டா

தமிழணங்கை வென்றதாலே, உலக மக்கள்
சரியான கவிஞனெனச் சொன்ன தாலே,
அமிழ்தென்ன மொழியவிழ்க்கும் நமது மக்கள்
அரும்பசிக் குணவாச்சா அதோ அந்தச்
சிமிழியிலே எண்ணெயின்றித் திரியும் தீயச்
சிறுத்துவிட்ட ஒளிதுலங்க வழிதானுண்டா ?
கமழ்மதுரத் தென்றலெனக் கானம் ஓச்சிக்
கவிபாடிக் களித்திருத்தல் நன்று ! நன்று !!

என்றுசொல்லி ஏடெடுத்துக் கிழித்துப் போட்டாள் !
எல்லையில்லாச் சினமெனக்கு இருந்தும் என்ன ?
ஒன்றேனும் பொய்யில்லை ! அவள்தன் கூற்று
உளம்நொந்த சோகத்தின் நெட்டுயிர்ப்பு !

மன்றல்தனில் எனைமணந்தாள் வாழ்க்கை தன்னில்
வற்றாத வறுமைதனைக் கூட்டிக் கொண்டாள்!
குன்றுமணி எடையுள்ள தாலி தன்னைக்
கோத்திருக்கும் கயிறின்றி வேறே இல்லை!

என்னசுகம் தனைக்கண்டாள் என்னு லவளும்?
இந்தநிலை இருந்தும்பல பிள்ளை பெற்றாள்!
கன்னல்மொழி பேசுகின்ற மக்கள் கூடி
கண்பிசைந்து அழுகையிலே ஏடெடுத்து
மண்ணுலகம் உய்ந்திடவே மார்க்கம் சொல்லி
மாத்தமிழில் கவிபாடிக் களித்தி ருந்தேன்!
சின்னவிழி தேனதரம் தெவிட்டாமேனிச்
சேய்வாழ நான்செய்த தொன்று மில்லை!

'பாழ் உலகே' எனச் சபித்தேன் என்பக் கத்தே
படுத்திருந்த என்பிள்ளை பசிக்கொ திப்பில்
'கூழம்மா கூழெ'ன்றான் கவிதை செய்யும்
கூர்ப்பேனா தனைமுறித்தேன் இனியென் வாழ்வில்
'கேள்பெண்ணே நான் உழவன் கீர்த்தி வெல்க
கிழித்தெறிந்தாய் ஏடுதன்னை, நீ உழத்தி!
பாழ்படுத்தும் கவிதையினி வேண்டாம் வேண்டாம்
பார்உழுவோம், எனச்சொன்னேன்.

அவள் மகிழ்ந்தாள்!

## கவிஞன்

சிந்தனை யென்ற கலப்பை கொண்டு
செய்ய தமிழாம் நிலமதனை
வந்தனை செய்தே உழுதுழுது
வார்த்தை களென்ற எருவுமிட்டு
நிந்தனை யற்ற எதுகைமோனை
நீண்ட வரப்பும் எடுத்துக் கட்டி
அந்தம்மி குந்த கவிதைப் பயிர்
ஆக்கும் உழவன் நற்கவிஞன் !

# இருந்தும் கேட்டான்!

சித்திரைவந்தது சென்னைநகர் முற்றும்
　　தீயெனச் சுட்டது நண்பகலில்
மித்திரன் தன்னோடு மேவினேன் அந்நகர்
　　முற்றும் அவன்சுற்றிப் பார்ப்போ மென்ருன்!

உத்திரவென்றேன் நான் ஒருதெரு சென்றதும்
　　உள்ளம் வெதும்பிற்று ஒண்வெயிலால்
புத்தரைப் போன்றவன் நண்பனவன் தினம்
　　போற்றிடும் தெய்வமோ காந்தி மகான்!

பக்கத்தில் நின்றதோர் 'ரிக்ஷா' வைக் கூப்பிட்டேன்
　　பாய்ந்து வந்தான் அதன் சொந்தக்காரன்
கக்கத்தில் 'ரிக்ஷா'வின் கம்பமிடுக்கியே
　　காத்து நின்ருன் எங்கள் சேவைக்காக!

" தக்கது அல்லவோய் 'ரிக்ஷா' விலேறுதல்
　　சார்ந்ததை மானுடன் ஈர்ப்பதிஞல்
மிக்கசுகம் வேண்டி வேருெரு தோழனை
　　வீணை வதைப்பது 'ஹிம்சையாகும்"

என்றுரை செய்திட்டான் நண்பனே நானிது
　　எப்படி ஹிம்சையா யாகுமப்பா?
கொன்றதைத் தின்றிடில் குற்றமில்லை யென்பார்
　　கொல்லாதிருப்பதோ நல்லவகை

இன்று முதல் உயிர் கொல்வதில்லை யென்று
　　எல்லோரும் தீர்க்கமாய் எண்ணி விட்டால்
நன்றுதான் ஆனலும் நண்பனே உணவிற்கு
　　நல்லவகை முன்னம் செய்தல் வேண்டும்!

மாடுபோல் வண்டியை மனித னிழுப்பதும்
　　மனிதனேறியதில் செல்லுவதும்
கூடாது சுதந்திர நாட்டினர் தம்மிடை
　　கொடிய அடிமையிச் செய்கையென்று

ஈடில்லா சட்டமாய்ச் சர்க்கார் செய்திட்டால்
ஏழைக்கெல்லாம் வேலைதந்து விட்டால்
ஆடலாம் களித்துநாம் நண்பனே ரிக்ஷாவில்
அதுவரை யேறுதல் குற்றமாகா!

கூறுநீ ஏருத காரணத் தாலிவன்
கொண்ட தொழில் விட்டு மாறுவானு?
தாறுமாருனதோர் சமூக அமைப்பினை
சரிசெய்தல் தானப்பா அஹிம்சையாகும்!

ஏறுநீ ரிக்ஷாவில் ஏறித்தான் காந்தியும்
எய்திஞர் சிம்லாவின் மலை உச்சியை
வேறுவழியில்லை யென்று விருப்பதை
விரும்புதல் குற்றமாய் ஆகாதப்பா!

வாழ்த்துநீ உஷ்ணத்தை மாற்றுவதற்கே இவன்
வசந்தவிகார் கொண்டு நம்மைச் சேர்ப்பான்!
பாழ்த்த குடும்பத்தின் பசிக்குணவாகும் நீ
பகிர்ந்திடும் துட்டுக்கள் இவன்தனக்கே!

தாழ்த்த முடியாது காலம்இனி யிங்கு
தாளவில்லை வெப்பம் கொல்லு தென்றேன்!
ஈழ்த்திட்ட ரிக்ஷாவில் இருந்தும் கேட்டான் சர்க்கார்
இக்குறை போக்காதா என்று நண்பன்!

# குழந்தை உள்ளம்!

அகிலமாளும் ராசாவுமே அமர வொண்ணாத
அம்மாமடிச் சிம்மாசனம் எனக்குமட்டும் சொந்தம்!
மகிழ்ந்ததிலே நீண்டநாளாய் இருந்து வந்தேன் நானே
வந்து எந்தன் தம்பிப்பயல் அமர்ந்து கொண்டா
னிப்போ!

அகலுவதாய்த் தெரியவில்லை அந்தப்பயல் தானும்
அம்மாவுந்தான் முன்னைப்போலே என்னைப்
பார்ப்பதில்லை!
சகலமான உரிமையையும் தாரைவார்த்துக் கொடுத்து
தனியாய் நானும் நிற்பதென்ருல் எப்படித்தான்
முடியும்?

சும்மாசும் மாஅம்மா அவனைத்தூக் கிவைத்துக்கொள்கிருள்!
சுவைத்துச் சுவைத் துஅந்தப்பயல் பாலமுதம்
உண்கிருன்!
எம்மாநேரம் பார்த்துக் கொண்டு எதிரிலேநான் நிற்பது?
எரிச்சல்வந்து அடிக்கப்போனல் அம்மா என்னைத்
திட்டுருள்!

தம்பிப்பயல் என்பதாலே தயவுகாட்ட முடியுதா?
சகித்துக்கொள்ளும் குணந்தான் பெரிய மனி
தருக்கேஇல்லையே!
சும்மா யாரும் சிம்மாசனம் இழந்ததுண்டா நாட்டிலே
சொல்பவர்க்கு நானிழந்த நஷ்ட அளவு புரியுதா?

இறைவனென்னும் பெரியவரே இரக்கம் உமக்கு இல்லையா?
இரண்டுவயசு நிரம்பாஎனக்கு தம்பிஎதற்கு
சொல்லையா?
அருந்தும்பாலை அவனருந்த அழுது நானும் நிற்கவா?
அம்மாமடியை அவனுக்காக்கி பொங்கும் துயரில்
தவிக்கவா?

குறைவு இன்றிக் குடும்பம் வாழும் வழியை நீயும்
செய்திட்டால்
குதிரைபோல அப்பா என்னை முதுகில் சுமக்கத்
தவறிடார்!
'பிறவு' அம்மா வருடம் ரெண்டு தம்பி பெத்த போதிலும்
பிணக்குக் கொள்ள மாட்டேன் அப்பா அருகில்
இருப்பார் ஆதலால்!

# தாலே தாலேலோ !

செல்லத்துரையே தூங்கிடடா ! — என்
ஜீவ அமுதே தூங்கிடடா ! —செல்லத்துரை....

பிள்ளைக்கனியே இளம்பிறையே
பேசும் சிலையே பாலகனே ! —செல்லத்துரை....

அலையிலே விளையா நல்லமுதே
ஆருயிரே என் பாலகனே
கலைகளில் இல்லாக் காவியமே
கருவில் வளர்ந்த ஓவியமே !
உலகினில் இல்லாத் தீஞ்சுவையே
உயிரே இன்பக் கற்கண்டே
மலையிலே விளையா மாணிக்கமே
மகவாய் வந்த பேரொளியே ! —செல்லத்துரை....

மலர்களில் வீசும் வாசனையே
மதுவினில் ஊறும் பெருங்களிப்பே
தளிர்களில் தவழும் பேரழகே
தவத்தால் கிடைத்த நன்முத்தே !
வளர்மா மதியே வான்சுடரே
வண்ணத் தமிழே என்மகனே
ஒளிரும் பொன்னே தொட்டவர்தம்
உள்ளம் மகிழச் செய்பவனே ! —செல்லத்துரை....

சேர சோழ பாண்டியர்தம்
தீரமெல்லாம் ஒருருவாய்
சேரப்பெற்ற மாமணியே
ஜெகத்தை ஆளப் பிறந்தவனே !
ஆரம் சூடிப் பட்டணிந்து
அன்பாய்ப்பேசி புகழ் படர்ந்து
வீரம் பேணி தமிழ் வளர்த்து
வாழ்க நீயும் பல்லாண்டு! —செல்லத்துரை....

# அது என்ன?

**அக்கா:**

அலம்பி வைத்த தட்டில் தம்பி
 கையை வைத்தானு ?– நீ
அழுக்குப் போக மீண்டும் அதனை
 தேய்க்க வேண்டுமா ?
பளப ளப்புக் குன்றி, ஏனோ
 கறைபடிந்துமே – வானில்
பழைய தட்டுப் போல நிலவு
 தோன்றுது அம்மா ?

தங்கை:

காகி தத்தால் கப்பல் செய்து
 கடலில் விட்டானு ?- அண்ணன்
காந்திப் பொம்மை ஒன்றை யதிலே
 காவல் வைத்தானு ?
ஆகா யத்தில் மிதந்து செல்லும்
 அழகைப் பாரம்மா – நிலா
யாரு செய்த கப்பல் ? அதிலே
 இருப்ப தாரம்மா ?

**தம்பி:**

அடுப்பு தன்னில் உன்னைப் போல
 வேலை செஞ்சுதா ?– நிலா
அலம்பிடாத கையைக் கொண்டு
 முகம் துடைச் சுதா ?
வடுப்ப டிந்த முகத்தி னோடு
 எதிரே வந்திட்டால் – அப்பா
வைய மாட்டார் நிலவுக் கேம்மா
 இது தெரியல்லே ?

**அண்ணன்:**

தோசை சுடும்போ தடுப்பு
அதிகம் எரிந்ததா ?- அந்தச்
சூட்டினாலே தோசை சிறிது
கருகிப் போச்சுதா ?
ஆசையுடனே நீயதனை
தம்பிக் கீந்தாயா ?- அவன்
ஆத்தி ரத்தால் தூக்கி வானில்
எறிந்து விட்டானா ?

**அம்மா:**

தோசை யல்ல ! தட்டு மல்ல !
கப்பலு மல்ல – என்றன்
சொக்கத் தங்கக் கட்டிகளா
சொல்வேன் கேளுங்கள்!
கூசும் இருட்டைப் போக்கு தற்கு
வான வீட்டிலே - கடவுள்
கொளுத்தி வைத்த விளக்காம்–நிலவு
தெரிந்து கொள்ளுங்கள் !

# ஜீவ மருந்து !

அன்னையும் அப்பனும் தந்த மருந்து
ஆயிரம் காலத்து ஜீவ மருந்து
மண்ணில் எல்லார்க்கும் கிட்டா மருந்து
மக்களின் மெய்தீண்டும் மகிழ்ச்சி விருந்து!

தொட்டாலே இன்பத்தை நல்கும் மருந்து
சொன்னாலே நாவும் மணக்கும் மருந்து
கட்டிக் கரும்பாய் இனிக்கும் மருந்து
கவலையைப் போக்கும் குழந்தைச்சொல் அருந்து!

ஒவ்வொரு ஜீவனும் வேண்டும் மருந்து
உள்ளத்தை மகிழ்விக்கச் செய்யும் மருந்து
திவ்வியமாம் நற்சேய்கள் நிறைந்து
செவியாரத் தரும் சொல்லைக் கேட்பாய் இருந்து !

# எங்கே வாழ்ந்தான்?

சின்னஞ் சிறிய உருவம் என்றன்
சேயன் மழலை மொழியான்
இன்னும் வயது இரண்டு சரியாய்
எய்தாப் பொடியன் எனினும்
என்ன அன்பு! என்னை யின்றி
உணவு கொள்ள மாட்டான்!
தின்னும் உணவை எடுத்தே என்னைத்
தின்னச் சொல்லித் தருவான்!

பீடா எடுத்துத் தருவான்! அதனைப்
பிறர்கொ டுத்தால் அழுவான்!
'ஏடா, பொடியா!' என்றால் எங்கே
இருந்தும் உடனே வருவான்!
'கூடா திதனை வெளியில் கொண்டே
எறி'யென் றாலோ எறிவான்!
பாடாய் அலுத்த உடலைத் தனது
பச்சைக் கரத்தால் பிடிப்பான்!

அன்னை, அண்ணன், அக்கா அவனின்
அன்புக் குரியோர் எனினும்
என்னைக் கண்டால் 'அப்பா! எங்கள்
அப்பா!' என்றே கூறி
விண்ணை முட்டக் குதிப்பான் என்மேல்
விழுந்து விழுந்து குதிப்பான்!
அன்னை சொல்லும் கேளான் வேறு
யார்சொல் லெனினும் கேளான்!

'மேனி அழுக்காய்ப் போச்சு! சற்றே
விலகென் றாலோ விலகி,
மானி போல அமர்ந்து முற்றும்
மௌன விரதம் பிடிப்பான்!
ஞானி எனினும் உள்ளம் நாடும்
நல்ல 'பொடியன்' இவன்தான்
மாநி லத்தே தோன்றா முன்னம்
மறைந்து எங்கே வாழ்ந்தான்?

# வாழும் நெறி

சிறுமதியார் தொடர்பு வேண்டாம் தம்பி !– உனக்குச்
சிறுமதியார் தொடர்பு வேண்டாம்

—சிறுமதியார்.

பெரும்பழி தந்திடும் பேரவை சென்றிடில்
விரும்பிடார் ஒருவரும் வீணனாய் உனைச்செய்யும்

—சிறுமதியார்.

சென்னிலம் சேர்ந்தால்நீர் தெளிவற்றுச் சிவப்பாகும்
தீம்பாலும் நஞ்சேற்றால் தீதாகும்; சேர்க்கைதான்
மண்ணிலே மனிதனை மதித்திடும் அளவுகோல்
மயங்கிநீ அழியாதே வாழ்க்கையில் முன்னேற

—சிறுமதியார்..

# உலகம் உன்னது

உலகம் உன்னது தம்பி – நீ அதன்
உயர்வுக்கு உழைத்திடு தம்பி!

தொழில்பல கற்றிட வேண்டும் – எவர்க்கும்
தோழனாய் நடந்திட வேண்டும்!
மலையே தகர்ந்திட்ட போதும் - நெஞ்சில்
பயங்கொள்ளக் கூடாது தம்பி!

பெரியோருக் கடங்கிட வேண்டும் - அவர்கள்
பேச்சினைக் கேட்டிட வேண்டும்!
வறியோருக் குதவிட வேண்டும் - இதை நீ
வழக்கமாய்க் கொள்ளடா தம்பி!

ஜாதீய வாதங்கள் செய்வார் - அந்தச்
சழக்கரை வெறுத்திட வேண்டும்!
நீதியைப் பேணிட வேண்டும் - என்றும்
நினைத்திடு தெய்வத்தை தம்பி!

ஏழை யரிடத்திலே அன்பு - உனக்கு
என்றுமே இருந்திட வேண்டும்!
சீலமாய் நடந்திட வேண்டும் - எவர்க்கும்
தீதெண்ணக் கூடாது தம்பி !

# வெண்ணிலா

பந்துதந்தார் தந்தை அதைத்
தூக்கி எறிந்தேன் - வானில்
வந்தஒளிப் பந்தைமனம்
நாடிவிட்டதால் !

சந்தரச்சுட ரொளிக்குச் சொக்கு
மனத்தை - விண்ணில்
கந்துகங் கவருமோசொல்
எந்தன் நண்பனே ?

தந்தை சொன்னர் "கோபம் மிகப்
பொல்லாது தம்பி - இந்தப்
பந்துமிக நல்லதுநீ
ஆடிப்பா" ரென்று !

வந்த கோபம் கொஞ்சமல்ல
ஆகினும் சொன்னேன் - "தமிழ்ச்
சந்தம்கேட்ட செவிவேறு
ஏற்குமோ" என்று !

"ஆகையாலே உன்றனுக்கு
வேண்டுவதென்ன ?"- என்று
ஈகைமிக்க எந்தன் தந்தை
கேட்கலுற்ருரே !

"தோகைமயில் நீலநிற
வான்முகட்டிலே - தொங்கும்
கூகைக்குக்கண் பார்வைதரும்
வட்டப்பந்தினை

கைத்தலத்தில் வைத்துஆட
ஆசைமேவுதே "- என்றேன்
"பைத்தியம்தான்" என்று தந்தை
மோனத்தே ஆழ்ந்தார்!

வைத்தளெண்ணம் வேருென்றின்மேல்
ஆனதிஞலே - என்போல்
பித்தனெவன் வீசியதோ
பந்து வெண்ணிலா!

எட்டக்கிடந்தே மனசைக்கொள்ளே
கொள்ளுதே – அந்தத்
துட்டப்பிள்ளேக் கெந்தன் தந்தை
தந்தபந்தினே

இட்ட முடன் நான்கொடுத்தால்
பெற்றுக் கொண்டுமே – அவன்
விட்டெறிந்த பந்தைஎனக்
கீவானே சொல்வாய் ?

# பிரார்த்தனை !

அருளாளனு மறிவாளனு
மறவாளனு முலகோ
ருற வாளனு முணர்வாளனு
முயர்வாளனு மழியாப்
பொருளாளனு புகழாளனு
பொறையாளனு மறையோ
ருறையாளனு நிறையாளனு
மெனையாளனு மிறையே !

என்மனந் தனிலே நிம்மதி சேர்க்கு
மீசனே யென்றுநா னுனையே
என்மனந் தனிலே வைத்துமே வணங்க
எனக்கருள் புரிவதுன் பாரம்!
வன்மனம் படைத்தார் கையிலே பொருளை
வைத்திட்ட நல்லவா உலகில்
நன்மனத் தோரை யுன்னடி யாரை
நண்பராய் தந்தவா சரணம் !

தேவனே அறிவின் செல்வனே தீமை
செய்பவர் தமக்குமே நன்மை
ஈவதே தொழிலா யுடையனே யெம்மை
என்றென்றுங் காத்திடுங் கோவே
பூவிலே தேனாய்ப் பொன்னிலே யொளியாய்ப்
பொன்றிடா வன்பினைக் கொண்டே
யாவரும் வாழ இன்பத்தை நல்கு
மிறையவா மறையவா சரணம் !

வந்திடுந் துயரை வழியிலே தடுத்து
வாழ்வினை யளித்திடுந் தலைவா !
சந்தத முனையே வணங்குதல் செய்வேன்
தாரணி யுள்ள நாள் வரையில்
எந்தையுந் தாயு மானவா நன்மை
யாவையு மளித்திடு மிறைவா
சிந்தையில் நாளுந் தெளிவினை யளிக்கும்
சிறந்தவா உயர்ந்தவா சரணம் !

எண்ணத்தி னுள்ளே யெண்ணமா யிலங்கு
மிறைவனே முதல்வனே சரணம் !
மண்ணகத் தோடு விண்ணக மெல்லாம்
வான்புகழ் கொண்டவா சரணம் !

கண்களி னுள்ளே மணியென விளங்குங்
கருணையி னுருவமே சரணம் !
மன்னிய துயர ந் தன்னையே மாய்த்துன்
வசப்பட வைத்தவா சரணம்.!

கண்ணிலே மணியா யிருந்துநீ எதையுங்
காணுநற் பேற்றையு மளிப்பாய் !
மண்ணிலே யூறு மின்சுவை நீராய்
வந்துநீ பலவுயிர் காப்பாய் !
எண்ணத்தி லறிவா யென்றுமே துலங்கி
யிடரற்று வாழவே வைப்பாய் !
ஒன்றிலே பலவாய் பலவிலே யொன்று
யுள்ளவா நல்லவா சரணம் !

பகலொடு இரவாய்ப் பன்மணித் திரளாய்
பார்த்திடும் பொருள்களாய் நல்ல
மகளொடு தாயாய் மனைவியாய் பெற்ற
மைந்தனு யுயிர்களுக் கெல்லா
மிகலதாய் சுகத்தை யளிப்பதா யெங்கு
மிருப்பதாய் விளங்கிடு மிறைவா
புகலவு மியலாத் துயரினைப் போக்கும்
பேரின்ப வெள்ளமே சரணம் !

வாலிபப் பருவம் வந்துற்ற நாளில்
மங்கையாய் உன்னை நான் கண்டேன்!
தாழிருங்கூந்தற் றையலா ளுன்னைத்
தன்னரு மைந்தனைத் தந்தாள்!
காலொடுகையும் நடுக்குறு வயதிற்
கைத்தடி யாகநீ வந்தாய்!
நாளெல்லா மெந்தன் நலத்தையே நாடும்
நல்லவா இறையவா சரணம் !

இறைவா யெனைக்காக்குந் துணைவா நாளும்நீ
தருவா யுந்தனருள் தகவாய்
நிறைவாய் மனமிருக்க யருள்வா யன்பினொடு
நித்த முனைத்துதிக்க வரமே
தருவா யென்துயரைக் களைவாய் தரணிமிசை
சகலசெள பாக்கியமு மடைந்தே
பெருவாழ்வு பெற்றுநினை நினைந்தே மகிழ்ந்
—திருக்கும்
பேற்றை யெனக்க ளிப்பாய் பெரியோய் !

ஐயனே அத்தனே அன்பனே அமுதே
அமுதத்தின் பலனே அளவிடற் கரிய
மெய்யனே மேலனே மேதினி தன்னை
விரும்பியே நாளுங் காத்திடுஞ் சுதனே
பொய்யவர் நெஞ்சம் புகுந்திடாச் சுடரே
புன்மையை நீக்கி நல்வழி காட்டி
உய்விக்கச் செய்வாய் உயர்ந்தவா நாளும்
உலகெலாங் காக்கு மிறையவா சரணம்!

வல்லவனே பெரியவனே உலகந் தன்னை
வாழ்விக்குங் கண்ணுதலே எல்லா ருக்கும்
நல்லவனே நாயகனே நடலை கொண்டு
நான்வாடச் செய்வதுவும் சரியோ சொல்வாய்!
தொல்லையிலா சுகவாழ்வு நாளும் பெற்றுத்
தூயவனே யுன் நினைவு மனதில் ஏற்று
அல்லலின்று வாழ்ந்துன்றன் பதமே சேர
அருளுவையே யெனையாளும் இறையேநீயும்!

சற்குருவே தற்பரனே சகத்தைக் காக்கும்
தயாபரனே தனிமுதலே துயரந் தீர்க்கும்
அற்புதனே அறிஞர்தொழு மறிவே நல்ல
அழகினிலே அழகாக யிலங்குங் கோவே
நற்கரும்பே நவமணியே நலமே! யார்க்கும்
நாயகனே நல்லவரி னுளத்தி னுள்ளே
பொற்புடனே நிலைத்திருக்கும் பொருளே நாளும்
புதுமைசெயும் பழையவனே பணிந்தேனுன்னை!

எல்லாம் வல்ல இறைவா வாழ்க!
என்னைக் காக்கும் நல்லோய் வாழ்க!
பொல்லாங் கென்பவை தவிர்த்துல காளும்
பெரியோய் சிறந்தோ யுயர்ந்தோய் வாழ்க!
வல்லார்க் கெல்லாம் வல்லோய் வாழ்க!
வானச் சுடரின் சுடரே வாழ்க!
பொல்லாங் கென்பவை எல்லாந் தவிர்த்து
புவியை புரக்கு மரியோய் வாழ்க!

என்னுயிரே மென்கலையே எழிலே வாழி!
இன்பமெலாந் தந்துதவும் அருளே வாழி!
துன்பமெலாம் துடைத்தழிக்கும் துணையே வாழி!
சுகம்வழங்கும் நலம்நிறைந்த சுடரே வாழி!

அன்புதனில் விளைந்திட்ட அமுதமே வாழி !
அறிவுலகம் போற்றுகின்ற அறிவே வாழி !
பண்புடையார் உள்ளமதில் வாழுகின்ற
பரம்பொருளே வாழியெமை வாழ வைத்தே !

கருணைக்குன்றே கனிந்தபொருளே களிப்பூட்டும்
கரும்பின்சாறே அமுதப்பாகே அழிவில்லா
பரனேயுனையே தினமும்பணிவா ருளமெல்லாம்
பண்பின்நெறியை பக்திவழியை பாலிக்கும்
அரனேயெளியோய் அகிலம்காக்கும் அருநிதியே
யுனையேநினைக்கும் கதியைஎனக்கே என்றும்நீ
தரவேதொழுதே பணிந்தேனுனது தாளிணையே
சகலவுயிர்க்கு முதலாயுதித்த சற்குருவே !

வேண்டலின்றிக் கொடுக்கின்ற வேந்தே ! மக்கள்
வேதனையை அழிக்கின்ற வேளே ! உண்மை
பூண்டிலங்கும் நல்லபெரும் பொருளே ! இந்தப்
பூதலத்தைக் காக்கின்ற பொலிவே ! என்றும்
ஆண்டியையும் அரசனையும் ஒன்ருய் எண்ணும்
அருந்தலைவா! எமைக்காக்கும் அருளே! வாழ்வில்
யாண்டுமுனை நான்மறவேன் நல்லோய்! என்றன்
நலிவகற்றும் நன்மருந்தே, கருணைக்குன்றே!

கற்காமல் கற்றவனுய் மதிக்கப் பட்டேன்
கருணையின்றி அருளுடையா ஞக்கப்பட்டேன்
பெற்ருளைப் பெண்டீரை அடித்தும் யாரும்
போற்றிடுமோ ருத்தமனுய் உயர்ந்து விட்டேன்
வற்ருத வறுமையிலே உழன்ற போதும்
மகத்தான செல்வந்த னென்று ஊரார்
சுற்றிவரும் நிலை நானும் எய்தப் பட்டேன்
தூயவனே எதற்கிந்தத் தொல்லை யெல்லாம்?

வல்லவனே நல்லவனே வாழ்க்கைத்துணை யானவனே
வற்ருத யின்பந்தனை வழங்கிடுமோ ருத்தமனே
இல்லையென்று முண்டுமென்று மிருமுறையிற்பேசும்படி
எங்குநி றைந்தவனே என்னவனே
பொன்னவனே
கல்வியிலா யென்னையுமே கற்றவரின் மத்தியிலே
கவிபாட வைத்தவனே கருணைமிக வுள்ளவனே
பல்பொருளாய் பலவுயிராய் பலமதத்தி னெரு
பொருளாய்
பகையறியா நிலையிலுளபரமனே நீவாழியவே!

பூரணனே புண்ணியனே புவியனைத்தும் பேணிக்
காக்கும்
பெரியவனே அரியவனே உரியவனே யுன்னை
நாளும்
சீருடனே துதித்திடவே சிந்தைதனி லெண்ணமதைச்
சேர்த்திடுவாய் என்றென்றும் சிறப்பாக ஐயா நீயே
பூரணமா யுன்நினைவு யெனக்கில்லை யாமானல்
பிழைத்திருத்தல் பிழையன்றே பூமிதனில்
வீணில் நானே
காரணனே கடுந்துயரை நீக்குகின்ற கருணைவேளே
கவனமுடன் என்கருத்தை ஏற்றருள
வேண்டும் நீயே !

தேனும றிந்திடா வகையிலே யதனிற்
தீஞ்சுவை தன்னையே சேர்ப்பாய் !
வானம றிந்திடா முறையிலே யதனிற்
மாமழை சேர்ப்பதும் நீயே !
பேணு மன்னையு முணர்ந்திடா வகையிற்
பிறங்கிடுங் கருதனை வளர்ப்பாய் !
நானு மறிந்திடா தன்மையி லென்னை
நாளெலாங் காத்திடு முதலே !

கனியினுள் சுவையே கரும்பினுள் சாறே
கவலையைப் போக்கிடும் அமுதே !
மணியினுள் சுடரே மதியினுள் ஒளியே
மலரினில் மணமே யுலகோர்
பிணியினை நீக்கும் பேரின்ப மருந்தே
பிழையில்லா புதியநல் லிசையே !
கனிவுடன் எனையே காலமும் காக்கும்
கருணையே இறையவா சரணம் !

சரணமே சரணம் தயாபரா நினது
தாளிணை யென்றுமே சரணம்
திரணமா யெனது இன்னலை யகற்றுந்
திறனுள உயர்ந்தவா சரணம்
இருநிதி தனக்கு மரசனே யென்போ
லெளியவர் வாழ்விலு மின்பம்
நிறைந்திடச் செய்யு மிறையவா யெனது
நினைப்பிலே யுள்ளவா சரணம் !

அகமா புறமா அறிவா தெளிவா
அதுவா இதுவா எதுநீ ?
சுகமா துயரா சுடரா இருளா
துணிவா பணிவா எதுநீ ?
இகமா பரமா இலதா உளதா
இறப்பா பிறப்பா எதுநீ ?
சகமே புகழு முதலே உனை நான்
எதுவாய் நினைந்து தொழுவேன் ?

எழிலார் வடிவே உன்னைக் காண
இரவும் பகலு மவாவினேன்
பொழில்கள் சூழும் புனல்கள் பாயும்
பொதும்ப ரெல்லாந் தேடினேன் !
விழிகள் சோர மேனி நோவ
விம்மி விம்மி நெஞ்சமே
அழலாய்க் காய அடிகள் தேய
அலைந்த லைந்தே வாடினேன் !

பூவைப் பார்த்தேன் புள்ளைப் பார்த்தேன்
பிறையைக் கதிரைப் பார்த்திட்டேன்
காவினூடே சோடி யாகக்
கலைமான் நிற்கக் கண்டிட்டேன்!
தாவி யலைகள் பாயுங் கடலும்
தரங்கம் பாடக் கேட்டிட்டேன்
யாவும் உனது நினைவை யெனது
நெஞ்சி லள்ளித் தூவின !

வண்ண வண்ண மலர்கள் கண்டேன்
வான மோங்கி வளர்ந்திட்ட
எண்ணி லாத மலைகள் கண்டேன்
இதயங் கவரு மருவிகள்
பண்ணி சைத்தே பாடிப் பாயும்
பாங்கு கண்டே வியந்திட்டேன்
உண்மை யாக இவைக ளெல்லாம்
உனது நினைவைத் தந்தன !

தென்னம் பாளை சிரித்த தந்தச்
சிரிப்பில் நீயும் நின்றனை
மின்னி வான மிடித்த தந்த
மின்ன லார்ப்பில் வந்தனை

என்னை நானே அறியா முன்னம்
இதயம் உனதாய்க் கொண்டனே
உன்னை யின்றி உலக மில்லை
என்னை யாளு மிறைவனே !

மலர்களில் நீயே மணமாவாய்
மற்று மினிய தேனுவாய்
தளிர்களில் மிளிரும் அழகாவாய்
தணியா இன்பம் தாளுவாய் !

பிஞ்சாய் காயாய் கனியாவாய்
பின்னும் முன்போல் வித்தாவாய்
அஞ்சா துலகில் அனைத்தையுமே
அளிப்பாய் படைப்பாய் காத்திடுவாய் !

கண்ணாய் மணியாய் ஒளியாவாய்
காற்ருய் தீயாய் கடலாவாய்
எண்ணாய் எழுத்தாய் இவைக் கெல்லாம்
இலக்கணப் பொருளாய் இலங்கிடுவாய் !

தோன்ருப் பொருளாய் வாழ்ந் திடுவாய்
தோன்றும் பொருள்களில் துலங்கிடுவாய்
ஆன்ரோர் அறிவும அறிய வொண்ணு
அறிவே அன்பே ஆண்டவனே !

துன்பத்தைத் தாங்கிடும் துணிவினைப் பெற்றிடத்
துதித்தேன் உனை நான் ஆண்டவனே
இன்பத்தை எண்ணியே ஏங்கா திருக்கவும்
எனக்கருள் புரிந்திடு ஆண்டவனே !

என்று முழைத்திடத் தெம்பினை நல்கிடு
ஏக்கத்தை நீக்கிடு ஆண்டவனே
நன்றே நினைக்கவுஞ் செய்யவும் நெஞ்சிலே
நாட்டத்தைச் சேர்த்திடு ஆண்டவனே!

பொறுமையும் அன்பையும் புகுத்திடு மனத்திலே
பொருமையை நீக்கிடு ஆண்டவனே
வறுமையில் செம்மையாய் வாழ்ந்திடும் பேற்றினை
வழங்கிடு அருளுடை ஆண்டவனே !

நல்லவன் என்றுபேர் நான்பெற்று வாழ்ந்திட
நல்லருள் புரிந்திடு ஆண்டவனே
சொல்லிலுஞ் செயலிலும் நேர்மையைத் தந்தெனைச்
சுகப்பட வைத்திடு ஆண்டவனே !

உலகந்தன்னை நடத்து கின்ற சக்தி எதுவோ—அந்த
நலந் திகழுஞ் சக்திக்கு நான் என்று மடிமை!

மலர்களெது மலர்வதெது மணப்பதெதுவோ—அந்த
ஒளிர் மிகுந்த சக்திக்குநான் என்று மடிமை!

அறிவுஎது அறிவதெது அறிந்ததெதுவோ—அந்த
அரிய பெருஞ் சக்திக்குநான் என்று மடிமை!

இன்பமெது துன்பமெது இரண்டு மெதுவோ-அந்த
அன்புமிகுஞ் சக்திக்குநான் என்று மடிமை!

முன்னதெது முடியாதெது முடிப்ப தெதுவோ—அந்த
வன்மைமிகுஞ் சக்திக்கு நான் என்று மடிமை!

# துணை

பாசம் நீங்கா ஆசைக் கனியே
    பக்கம் நீயும் இருப்பதினுல்—என்
    பக்கம் நீயும் இருப்பதினுல்,
வீசும் புயலின் ஊடே கடலில்
    விரைந்து நீந்திச் செல்லுகிறேன்—நான்
    விரைந்து நீந்திச் செல்லுகிறேன் !

குணத்தில் குன்ரு அன்பே நீயென்
    கூடத் தொடர்ந்து வருவதினுல்—என்
    கூடத் தொடர்ந்து வருவதினுல்,
கனத்த மழையில் கருக்கி ருட்டில்
    காட்டில் துணிந்து செல்லுகிறேன் !—நான்
    காட்டில் துணிந்து செல்லுகிறேன் !

தேனை மிஞ்சும் அமுதே என்னைச்
    சேர்ந்து தொடர்ந்து வருவதினுல்—நீ
    சேர்ந்து தொடர்ந்து வருவதினுல்,
வானை முட்டும் மலையின் மீது
    மகிழ்ந்து துணிந்து ஏறுகிறேன் !—நான்
    மகிழ்ந்து துணிந்து ஏறுகிறேன் !

காற்றில், தீயில், ஆற்றில், போரில்
    கவலை யின்றிச் செல்வதெலாம்—நான்
    கவலை யின்றிச் செல்வதெலாம்
ஆற்றல் மிக்க ஈசா நீயென்
    அருகில் இருக்கும் தைரியமே-நீ
    அருகில் இருக்கும் தைரியமே !

# யாத்திரிகன்

நடந்த வழிதெரியும் உலகமதிலே—இனி
நடக்கும் வழிதெரியா யாத்திரிகன் நான்!

—நடந்த..

தொடர்ந்தது முடிந்திடும் தன்மை அறியா—விசைத்
தொடர்பினில் இயங்கிடும் யந்திரம் போலே

— நடந்த..

என்று முடிவுறுமோ எந்த ஊரிலோ ?-நல்ல
இரவிலோ பகலிலோ எவ்விடத்திலோ ?
ஒன்று மறிந்திடாமல் காலப் போக்கிலே-தினம்
ஓய்வின்றிச் செல்லுகின்றேன் எவ்விடத்திற்கோ ?

—நடந்த.

# விரோதியா நண்பனா?

காவியம் செய்தது நானென்றேன்—அதன்
கருத்தாக நிற்பது யாரென்றாய் ?
ஓவியம் செய்தது நானென்றேன்—அந்த
உருவத்தின் உட்பொருள் யாரென்றாய் ?

வானத்தை அளந்தது நானென்றேன்-அந்த
வல்லமை தந்தது யாரென்றாய் ?
மோனத்தி லாழ்ந்ததும் நானென்றேன்-உன்
முன்னாலே நிற்பது யாரென்றாய் ?

காரியம் செய்வது நானென்றேன்—அதன்
காரணம் யாரென்று கேட்கின்றாய் ?
வீரியம் பேசிடும் ஆண்டவனே—நீஎன்
விரோதியா நண்பனா சொல்லிவிடு !

# மனக் குரங்கு

மனமெனும் குரங்கு வாழ்விலே என்னை
வாட்டி வதை புரியுதே!-தினம்
—மன...

பணமெனும் ஆசைப் பகட்டினைக் காட்டி
பதவியாம் மோக வலையைமுன் நீட்டி
குணங்கெட்டுப் பழிசெய் எண்ணத்தை மூட்டி
கோதையர் நினைவிலே தினம்முழுக் காட்டி
—மன...

நம்பிக்கை மோசம் பண்ணிடச் செய்யும்
நல்லோரின் உறவை வெறுத்திடச் சொல்லும்
வம்பர்கள் சேர்க்கை வலிந்துமேற் கொள்ளும்
மறுத்தாலும் கேளாமல் மமதையால் துள்ளும்
—மன....

துணிச்சலாய்த் தவறுகள் செய்திடச் சொல்லும்
சுகத்திற்காய் களவையும் மேற்கொள்ளப் பண்ணும்
தனிச்சுவை மதுவிலே இருப்பதாய் எண்ணும்
தன்னலம் கொண்டுமே வாழ்ந்திடப் பண்ணும்
—மன...

# மனிதா கேள் !

இன்பமும் இனிமையும் எங்கும் செழித்திட
இயன்றதைச் செய்திடடா! மனிதா!
—இன்பமும்...

அன்பு வழியிலே மேலோர் அருளிய
அறநெறி போற்றிடடா! மனிதா!
—இன்பமும்...

மனிதர் தம்மிலே வேற்றுமை வகுத்திடும்
மடமையை நீக்கிடடா ! மனிதா நீ
கானிடை வாழ்ந்திடும் விலங்குகளிடத்திலும்
கருணையாய் நடந்திடடா- மனிதா நீ
—இன்பமும்...

பொருளால் வருவது இன்பமல்ல, மாதர்
போகத்தால் வருவது சுகமுமல்ல-நல்ல
அருளால் ஏழையர் இன்னல் தவிர்த்திட
ஆற்றிடும் தொண்டுதான் சிறந்ததடா!
—இன்பமும்...

இளமையும் வலிமையும் நிலையற்றதே, என்றும்
ஈதலும் தர்மமும் அழிவற்றதே! பொய்
புலமையும் பொருள்களும் பயனற்றதே, தொண்டு
புரிபவர் வாழ்வுதான் உயர்வுற்றதே!
—இன்பமும்...

உலகோர் அனைவரும் உன்னவரே, எல்லா
ஊர்களும் மொழிகளும் உன்னதுவே, இந்த
நலம்சேர் ஒற்றுமை மார்க்கத்திலே, நீ
நாளும் நடந்திட முயல்வாயடா!
—இன்பமும்...

பகைப்பவர் தமக்குமே தோழனடா, நீ
படிப்பில்லாக் குழந்தைக்கு ஆசானடா
நகைப்பவர் நகைக்கட்டும் கடவுள்தனை, நீ
நாளும் நம்பியே நடந்திடடா!
—இன்பமும்...

# செம்மை

மானம் பெரிதென மதித்து நடப்பதே
வாழ்க்கையில் மிகப்பெரும் கடமையடா!
ஈனம் படர்ந்திட்ட வாழ்க்கையில் பணம்வரும்
ஏச்சும் கூடவே தொடருமடா!-மனிதா!
-மானம்..

காலம் செய்திடும் மாறுதல் எதிலும்
கருமம் அழிவதே இல்லையடா!
சீலம் மறந்துநீ இழிதொழில் செய்திட்டால்
ஜெகமதை என்றுமே மறவாதடா!-மனிதா!
-மானம்..

பொருளீட்டல் எளிதான செயலாகும் உலகிலே
புகழீட்டல் மிகமிக அருமையடா!
இருள்சூழ்ந்த வாழ்வுன்னை சூழ்ந்திட்ட போதும்
ஈயென்னக் கேட்டால்நீ அழிந்தாயடா!-மனிதா
-மானம்..

அருமை மக்கள்தான் அரும்பசி கொண்டுமே
அலறித் துடித்திட்ட போதிலுமே
பெருமை குலைந்திடச் செம்மை துறப்பதில்
பெரும்பிழை வேறெதும் இல்லையடா!-மனிதா!
-மானம்.

# வாழும் முறை !

புகழுடன் வாழ்வதே வாழ்வு!-புவியில்
புகழுடன் வாழ்வதே வாழ்வு

இகழ்வார்களிடத்திலும் இரக்கமாய் நடந்து
ஈகையில் குணத்தில் எவரினும் சிறந்து
-புகழுடன்.

பணமெனும் மமதையால் பழிபலபுரிந்து
பண்பிலா மனிதனாய் நடப்பதிலிருந்து
தினம்தினம் விலகியே சீர் பெற்றுத் திகழ்ந்து
செய்தொழில் அனைத்திலும் பொதுநலம் மிகுந்து
-புகழுடன்.

# சொல்லேன் !

சொல்லேன் பிறர்மேல் பழி நானே
தொல்லைகள் பலதந்த போதிலுமே !
—சொல்லேன் ..

கொல்லன் உலையில் சூடேற்றி
கொதித்துப் பழுத்த இரும்பெடுத்து
நல்ல உடலில் சூடிட்டே
நலிவுகள் செய்தென்னை வருத்திடினும்
—சொல்லேன்...

நல்லோர் பெரியோர் முன்னிலையில்
நஞ்சினைக் கோப்பையில் தந்திடினும்
கல்லால் பலர்கூடி அடித்திடினும்
கத்தியால் சதைதனைப் பிளந்திடினும்
—சொல்லேன்...

சிலுவையில் அறைந்தவர் கைவலியை
சேசுதான் எண்ணியே வருந்தியதால்
கொலைசெய்ய வந்தவன் இடத்தினிலே
கொடுவாளை முகம்மது கொடுத்ததினால்
—சொல்லேன்...

இன்னா செய்தாரை ஒறுத்திடுதல்
இயல்பென்று வள்ளுவர் சொன்னதினால்
அன்னார் வழிவந்த காந்தி மகான்
அடிகளை அடியேனும் போற்றுவதால்
—சொல்லேன்...

## அறம் வளர்க !

வறியோர்க்கு ஈவதே அறமாம்
மற்றதெல்லாம் சுயவிளம் பரமாம் !
—வறியோர்...

எரியுற்ற தணலெனப் பசிமுற்றிக் குடலை
இம்சிக்க துயருற்று ஏங்கியே அலையும்
—வறியோர்...

பண்பாலே கையேந்தி கேட்டிட மறுத்து
பசியோடே தெருவினில் அலைவோரை அழைத்து
தெம்பூட்டிப் பசியாற்றி துன்பத்தைத் துடைத்து
சிறப்புற்று வாழ்ந்திட செய்வாய் நீ தனித்து
—வறியோர்...

எம்மொழி எம்மதம் யாதுன்றன் நாடு
என்றுமே கேட்டறம் செய்வதோ தீது
நொம்பலம் கொண்டவர் அண்டின போது
நிம்மதி கொண்டிடச் செய்வாய்தப் பாது
—வறியோர்....

# நாம்

வாழ்க வாழ்ந்திட நாம்
வான்புகழ் வாய்த்துமே தான்

—வாழ்க....

ஆழ்கடல் சூழ்ந்த அவனியின்மீது
அனைவரும் சமமாய் ஆகி அன்போடு

—வாழ்க....

சொல்லிலே சமத்துவம் சமரசம் என்றே
சூழ்ச்சியால் பிறரைநாம் ஏய்த்திடற் கென்றே
அல்லும் பகலும் செய்யும் ஆராய்ச்சி இன்றே
அற்றது நாமெல்லாம் ஆனோம் ஒன்றென்றே

—வாழ்க....

செல்வரும் ஏழையும் சீர்கெட்டு நின்றே
செய்திடும் சண்டைகள் தீர்ந்தது கண்டே
கல்வியில் அனைவரும் கரைகண்டோம் என்றே
களித்துக் களித்துத் தமிழ்க் காவியம் உண்டே

—வாழ்க....

# எது பெரிது?

ஆனந்தம் வாழ்விலே நிலைத்திடும்
அளவிலா இன்பம் கிடைத்திடும்
வானமும் வையமும் வாழ்த்திடும்
மனைவியும் கணவனும் ஒன்ருனல்!

இல்லறம் நல்லற மாகிடும்
எழிலொடு மனையறம் நடந்திடும்
வல்லமை ஆணுக்கு வளர்ந்திடும்
மனைவியும் கணவனும் ஒன்ருனல்!

குடும்பமே குதூகலம் அடைந்திடும்
குழந்தைகள் அறிவொடு வளர்ந்திடும்
குலத்திற்கே பெரும்புகழ் வாய்ந்திடும்
கொண்டவன் கொண்டவள் ஒன்ருனல்!

பேரின்பம் புவியிலே கிடைத்திடும்
பெரும்பொருள் வீட்டிலே சேர்ந்திடும்
ஊரெலாம் போற்றியே புகழ்ந்திடும்
உரியவள் உரியவன் ஒன்ருனல்!

வானத்தை அளப்பது பெரிதல்ல
வையத்தை அறிவது அரிதல்ல
நானிலந் தன்னிலே சதிபதிகள்
நட்பொடு வாழுதல் பெரிதம்மா!

# வேண்டும்

வாழ்வில் இன்பம் பெருக வேண்டும்
மக்கள் சுகமாய் வாழவேண்டும்
ஏழை என்ற சொல்லே உலகில்
இல்லை என்று போக வேண்டும்!

பாலை சோலை யாக வேண்டும்
படிப்பு நாட்டில் பெருக வேண்டும்
வேலை யின்றி அலையு மக்கள்
வேதனைதான் தீர வேண்டும்!

சாதி பேதம் நீங்க வேண்டும்
சமத்து வந்தான் தழைக்க வேண்டும்
ஆதி தெய்வம் ஒன்றே என்ற
அறிவு நாட்டில் வளர வேண்டும்!

அன்பை மதிக்கப் பழக வேண்டும்
அழகை ரசிக்கத் தெரிய வேண்டும்!
பண்பு கொண்டே ஆணும் பெண்ணும்
பழகி இன்பம் அடைய வேண்டும்!

கண்ணியத்தை உணர வேண்டும்
கடமை எண்ணி நடக்க வேண்டும்!
கட்டுப் பாட்டுக் கடங்கி வாழக்
கற்றுக் கொள்ள முயல வேண்டும்!

வாழ்வில் இன்பம் பெருக வேண்டும்
மக்கள் சுகமாய் வாழவேண்டும்!
ஏழை என்ற சொல்லே உலகில்
இல்லை என்று போக வேண்டும்!

# இன்பத் தொண்டு

வானத்து நிலவை கையினுல் பற்றும்
வல்லமை பெற்ற பின்பு
வையகமீது அஞ்சுவ தெதற்கு ?
வாழ்க்கையில் பெறுவோம் தெம்பு !
—வானத்து...

கானத்தில் கனலும் குளிர்ச்சியும் ஏற்றிக்
காட்டிக் கற்றதுண்டு
கவலையால் வாடும் பேதை நன்மனமே
களித்திடு இன்பம் கொண்டு
—வானத்து....

தேன்தரும் இனிப்பைத் தென்றலின் சுகத்தைத்
தந்திடும் பாட்டு உண்டு
வீணிலே அதை நாம் உலகுக் களிக்க
மறுப்பதோ மடமை கொண்டு ?
—வானத்து....

ஆண்டவன் அளித்த சம்பத்தைப் பொதுவில்
அகிலத்தார்க் காகவென்று
அன்புடன் அளிக்கும் இன்பம்
அறிந்தபேர் உணர்வார் நன்று
வானத்து....

# சுதந்திரம் வந்தது! ஆனால்......

வீதிவீதி யாகவேலை தேடியோடு றார்சிலர்
வேலைஏதும் இன்றிக்காரில் எங்கும்சுற்று றார்பலர்
போதுபோக வில்லையென்று ஏக்கங் கொள்ளு றார்பலர்
போதுபோக்க சீட்டுஆட்டம் போடுகின்ற ரேசிலர் !

மாடிமீது மாடிகட்டி வாழுறார்க ளேசிலர்
வீடுஇன்றி வீதியோரம் ஏங்குறார்க ளேபலர்
பாடுஇன்றி வாழ்விலின்பம் தேடுறார்க ளேசிலர்
பாடுபட்டும் சோறுஇன்றி வாடுறார்க ளேபலர் !

குப்பைமீது சோற்றைவீணில் கொட்டுறார்க ளேசிலர்
குப்பை சேர்ந்த சோறுமின்றிச் சோருறார்க ளேபலர்
தப்பிலாது மெய்மொழிந்து சாவைநாடு றார்சிலர்
ஒப்பிநாளும் பொய்மொழிந்து மேன்மைதேடு றார்பலர் !

கற்பைநம்பி நாளும்வாழ்வில் கஷ்டமேற்கி றார்சிலர்
கற்பைவிற்று இன்பவாழ்வைக் காணுறார்க ளேபலர்
சொற்பகாலப் பதவியேறி சுகிக்கயெண்ணு றார்சிலர்
அற்பலஞ்சக் காசுக்காக அழிவைச் செய்யு றார்பலர் !

இந்தத்தன்மை தன்னிலிந்த நாடுசெல்ல எண்ணியா
அன்று பெற்றோம் சுதந்திரமே ஆசையோடு உன்னையா ?
அண்ணல்காந்தி ஏழைவாழக் கேட்டநற் சுதந்திரம்
தன்னலத்தார் கையில்சிக்கித் தாறுமாறு ஆகுதே !

# புத்தாண்டு

புத்தாண்டு பிறந்தது போற்றுவோம் அதனை நாம்!
புத்தாண்டு பிறந்தது போற்றுவோம் அதனை நாம்!

நத்திய நன்மைகள் நாட்டில் மலர்த்தியே
நல்லெண்ணம் ஊக்கியே நலிவெண்ணம் போக்கியே

அத்தனை மாந்தரும் ஒத்த மனத்துடன்
ஆயிரம் ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்திட

புத்தாண்டு பிறந்தது போற்றுவோம் அதனை நாம்!
புத்தாண்டு பிறந்தது போற்றுவோம் அதனை நாம்!

# தீபாவளி

திருவிளக்குஞ் செங்கதிர்கள் தீபஒளி நீட்ட
செம்மையுள்ளத் தோடுமக்கள் ஜெகத்துயரை ஓட்ட
பெருமைபடப் பட்டாசுகள் பெரும்ஒலியைக் கூட்ட
பெரியோரையுஞ் சிறியோரையும் பெருங்களிப்பு ஆட்ட
நறுங்கலையாந் தொழில் வளர்ந்து நாட்டிலின்பம் ஈட்ட
நன்மையெல்லாம் வந்தெய்தி நலிவைவிழுத் தாட்ட
இருள்மனத்தார் பகைமுடித்து வந்தவொரு நன்னாள்
இன்பமிகு தீபாவளி என்னுமிந்தப் பொன்னாள் !

# பொங்கல் பெருநாள்

இயற்கையன்னை தோற்றத்திலே எழில்பொங்கிட,
ஏற்றிவைத்த தீபத்திலே சுடர்பொங்கிட,
கயற்கண்மங்கை உள்ளத்திலே காதல்பொங்கிட,
காராம்பசு மடிதனிலே பால்பொங்கிட,
முயற்சிகொண்டு [உ]ழைத்தவர்க்குப் பலன்பொங்கிட,
முருகவிழ் மலர்களிலே தேன்பொங்கிட,
வயற்புறத்தே நெற்கதிர்கள் வதியப்பொங்கலும்,
வந்ததுபார் தமிழகத்தார் மனங்களிக்கவே !

பொங்கலென்றால் தமிழர்களின் உள்ளம்பொங்குதே !
புதுமையெல்லாம் பொங்கலிலே எழில்பரப்புதே !
மங்கலந்தான் பொங்கலிலே எங்குந்தங்குதே !
மனைகள்தோறும் பால்பொங்கல் மணங்கமழுதே !
எங்கள்பெரும் பண்டிகையாம் பொங்கல்திருநாள் !
இனிப்புமிகு செங்கரும்பு ஏற்றங்கொள்ளுநாள் !
தங்கநிற மஞ்சளிஞ்சி தலைசிறக்குநாள் !
தளிகையிட்டுப் புதிருங் கொள்ளத் தகுந்த பெருநாள் !

# வாழ்த்துவோம்!

மன்புவி யெங்கணும் வாழ்ந்திடும், நல்ல
  மாத்தமிழ் மாந்தர்கள் கேட்டிடற் கென்றே
இன்கவி யாலேநற் பொங்கலை வாழ்த்த
  எம்மை யழைத்திட்ட வானொலியாரே,
தன்செவி யாரஎம் பாட்டினைக் கேட்கும்
  செந்தமிழ்ச் செல்வர்காள், செல்வியீர், வாரா!
பொன்தவி சேறியிவ் வையத்தைக் காக்கும்
  பூரணச் சோதியே, பொங்கல் வணக்கம்!

வள்ளுவ மாக்கவி வாழ்த்திய பொங்கல்
  வான்கவிக் கம்பனும் போற்றிய பொங்கல்
தெள்ளுசி லம்பொலி தந்தஇ ளங்கோ
  சீர்த்தித் திறம்பெற்ற சங்கக் கவிஞர்
உள்ள முருக்கிடும் தெய்வீகப் பாடல்
  ஓதியோர், தேசியப் பாரதி போன்றோர்
நல்லை மனத்தொடு வாழ்த்திய பொங்கல்
  நாங்களும் வாழ்த்திட வந்தநற் பொங்கல்!

பொங்கல்நன் னாளென்று எண்ணிடும் போதே
  பூரிப்புக் கொள்ளுதே நெஞ்சம் தன்னாலே
மங்களம் தங்குதே மாநிலம் மீதே
  வையகம் தன்னிலே பொங்கலைப் போலே
இங்கித மானதோர் பண்டிகை வேறே
  இல்லையென் றோதுவோம் எக்களிப் போடே!
நங்குல மக்கள்த மில்லங்க ளூடே
  நாளெல்லாம் பொங்குக இன்பம் மென்மேலே!

மார்கழி தாண்டியே வந்தது பொங்கல்
  வயலெலாம் நெற்கதிர் முற்றின கண்டீர்!
ஏர்த்தொழி லாளர்தம் [உ]ழைப்பினா லின்று,
  இன்பங்கள் வந்தேநம் கதவினைத் தட்டும்

ருடன் மாந்தர்கள் ஊரெங்கும் கூடித்
திருவிழாக் கொண்டாடி இறைவனைப் பாடி
ஆர்வமாய்ப் பால்பொங்கல் பொங்கிட என்றே
ஆர்த்தொலி செய்வரே அணியணி யாக!

மாணிக்கக் கற்கள்மேல் பொற்பானை யேற்றி
வாசநற் சந்தனக் கட்டைத்தீ மூட்டி
தேனினை நீராகப் பெய்துமே, நல்ல
செந்நெல் அரிசி கரும்பு கற்கண்டு
ஆநிரை தந்தநெய் வான்கனித் துண்டம்
அக்காரம் முந்திரி ஏலம் லவங்கம்
பேணிடு மன்புங் கலந்துமே, மாதர்
பொங்கிடும் ஆனந்தப் பொங்கலே வாழி!

சிற்றுடைச் சிறுமியர் இடையிலே மின்னச்
சிறுவர்கள் சாயத்துண் டுடுத்தியே செல்ல
பெற்றோரும் புத்தாடை கட்டியே யின்று
பெரியோரின் பாதத்தில் பணிவரே நன்று!
கற்றவும் பால்பொங்கக் கன்றினை நக்கும்
கழனிக ளெங்கணும் தானியம் எக்கும்
உற்றாரும் ஊராரும் ஒன்றாகச் சேரும்
உயர்ந்தநற் பொங்கலே வாழியோ வாழி!

கீழ்த்திசை வானிலே புத்தொளி கண்டோம்;
கீழ்மை இருட்குலம் போனது என்போம்;
தாழ்ந்த நிலையிலே வாழ்விது என்ற
தன்மை இனிநமக் கென்றுமே யில்லை:
சூழ்ச்சித் திறத்தாலே ஏய்த்துமே வாழும்
துட்டப் புரட்டர்கள் தொல்லையை நாளும்
வீழ்த்தியே பாரதம் மேம்பட்டு வாழ
வாழ்த்துவோம் பொங்கலை வாழியோ வாழி!

தானியம் தந்துமே மண்மகள் வாழ்த்தத்
தளிர்மலர் தந்துமே தாவரம் வாழ்த்தத்
தேனினைத் தந்துமே பூக்குலம் வாழ்த்தத்
தெளிபுனல் தந்துமே பொய்கைகள் வாழ்த்தக்
கானகப் புட்களின் இன்குரல் வாழ்த்தக்
காராம் பசுக்குலம் பால்தந்து வாழ்த்த
வானகம் புத்தொளி தந்துமே வாழ்த்த
வந்தநற் பொங்கலே, வாழியோ வாழி!

# பண்டிகை

செங்கரும்புச்சோலை முத்து திர்க்க
தேன் கதலியீட்டம் தாறெடுக்க
அங்கமெலிய உழைத்த உழவரின்
ஆவிபொலிவுறக் கழனி முற்றும்
தங்கச் சிறுமணி கோத்தது போற்
சம்பாநெற் கதிர் முற்றி நிற்க
பொங்கல் மலர்ந்தது தமிழரிடை
புதுமை மிளிர்ந்தது நாடுமுற்றும் !

வறுமைய கன்றது வையத்திடை
வழக்கு ஒழிந்தது நம்மோரிடை
சிறுமை யுண்டாக்கிடும் அடிமைதனைச்
சிதைக் கத்திரண்டனர் தமிழ ரென்ற
பெருமைதரும் சொற் கேட்டதினல்
பூரித் தெழுந்தேன் தோள்களென்ற
உரிமைதனைத் தமிழ் மக்களுக்கு
உதவட்டும், பொங்கலைப் போற்றி டுவோம்!

# கன்னி யாடினாள்

காலத்தை வென்றுநின்று கன்னியாடினாள்
காலதேவன் நெஞ்சில்நின்று கன்னியாடினாள்
சீலக்கலை துலங்கக் கன்னியாடினாள்
சின்னயிடை நலுங்கக் கன்னியாடினாள் !

கோலச்சி லம்பொலிக்கக் கன்னியாடினாள்
கொஞ்சும் வளைகுலுங்கக் கன்னியாடினாள்
பாளைச்சி ரிப்புகுத்துக் கன்னியாடினாள்
பாதமலர் தான்வருந்தக் கன்னியாடினாள் !

வில்லாய்உ டல்வளைத்துக் கன்னியாடினாள்
விம்மும் புஜம்நெறித்துக் கன்னியாடினாள்
புள்ளியிளம் மாமயிலாய்க் கன்னியாடினாள்
பொன்னிறத்து மின்னலெனக் கன்னியாடினாள் !

தென்றலிலே பூங்கொடிதான் ஆடுதல் போலே
தேன்நிலவில் கடல்அலைதா வுதல்போலே
குன்றாத பேரழகு நர்த்தனமாடக்
கோலமதி மாமுகத்துக் கன்னியாடினாள் !

ஆடுவோனை ஆட்டுவிக்கும் கன்னியாடினாள்
அன்பருள்ளம் இன்பங்கொள்ளக் கன்னியாடினாள்
கோடும் புருவத்தோடு கண்கள்சுழல
கோயிற் சிலைநிகர்த்த கன்னியாடினாள் !

# இன்பம்!

நட்டு வளர்த்திட்ட சோளப்பயிர்த் தட்டை
முற்றிக் கதிர்பற்றி நிற்கையிலே
சிட்டுகள் வந்ததைக் கொத்தித் தின்னுமலே
சிங்கா ரப்பெண்பரண் மீது நின்று
கட்டுடல் நோவக் கவண் கொண்டு வீசியே
கையால் பறைகொட்டி வாய்திறந்து
சிட்டுகளச்சோ அச்சோவெனக் கூவிடும்
தேன்மொழி கேட்பவர்க் கின்ப மடா!

காற்றிலே முல்லைப்பூ வாசம்வர உடன்
கன்னி யொருத்தி நடந்துவர
சோற்றுக் கலயம் தலையினிலே வேடு
சுற்றிய தன்மையில் ஏறிவர
ஏற்றம் இறைத்துக் களைத்திட்ட வாலிபன்
ஏற்றமதை விட்டவள் பின்புவர
ஊற்றுக் கரையில் மரநிழலில் அவர்
உட்காரும் காட்சியோ ரின்பமடா!

பட்டு மணத்திட பாக்கு மணத்திட
பாவை யவளுடன் தீண்டியதால்
தொட்ட கரங்களில் பெண்மை மணத்திட
சுந்தரியாளுடன் சேர்ந்து தினம்
வெட்சியும் ரோஜாவும் பூத்திட தோட்டத்தில்
வேலைதான் செய்வதே காளையர்க்குக்
கட்டிலா இன்பம், காலமெலாம் இந்தக்
காட்சியைக் காண்பதோர் இன்பமடா!

# கவிஞன் ஆசை

உலகமக்கள் ஒருகுடும்பம் ஆகவேண்டும்
ஒருதலைமைக் கீழ்உலகம் இயங்கவேண்டும்
பலதெய்வம் பலமதங்கள் அகலவேண்டும்
பாரெங்கும் இதுவிரைவில் பரவவேண்டும்
மொழிகளெல்லாம் ஒருமொழியாய் இணைய வேண்டும்
முறுவலுடன் அதைஉலகம் ஏற்கவேண்டும்
விழிகளினால் இதைக்காணும் வாய்ப்பெனக்கே
விரைவினிலே வரவேண்டும் வரவே வேண்டும்!

# கவியின் கனவு

ஒன்றே உலகென என்றும் நெஞ்சிலே
எண்ணிச் சேர்ந்திடுவோம்-பகை
இன்றி நேசமாய் ஒன்றி யாவரும்
அன்பாய் வாழ்ந்திடுவோம்!

ஒன்றே மொழி! நமக் கொன்றே கடவுள்
ஒன்றே மதம் உலகில்!-இனி
ஒன்றே தலைமை! ஒன்றே சமூகம்
என்றே புகன்றிடுவோம்!

உழைப்பால் உயர்வின்றிப் பிறப்பால் உயர்வெனும்
எண்ணத்தை மாய்த்திடுவோம்!-என்றும்
உழைக்கா திருந்திட நினைக்கும் மனிதரை
வெறுத்தே ஒதுக்கிடுவோம்!

உடமை யாவையும் மனித குலத்துக்கே
உரிமை யாக்கிடுவோம்!-தனி
உடமை யாவது மடமை நெறியென
உள்ளம் ஓர்ந்திடுவோம்!

கூனும் குருடரும் நொண்டி நோயரும்
குழந்தை முதியவரும்-நாம்
பேணும் தரத்தவ ராகும் மாதலால்
பேரருள் புரிந்திடு வோம்!

எல்லார்க்கும் கல்விஎல் லோர்க்கும் வேலை
எல்லோர்க்கும் சமவாழ்வு!-இவை
இல்லாத நாடே இல்லாது போனல்
இல்லை பகைவாழ்வு!

ஏற்றத் தாழ்வுகள் நீங்கிய வாழ்க்கையில்
ஏது பகைமை யடா?-சுய
ஏற்றம் கருதிடும் கூட்டம் தொலைந்திடில்
ஏது வறுமையடா?-உலகில்
ஏது வறுமையடா?